சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# சைவத் திருமண தமிழ் மந்திரங்கள்



அப்பர் அருள்நெறிப் பதிப்பகம்
சென்னை.41.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்



# சைவத் திருமண தமிழ் மந்திரங்கள்

தொகுப்பாசிரியர் :

ஆ. சுப்பிரமணியன்
ஓய்வுபெற்ற தலைமை மின் பொறியாளர்
தமிழ்நாட்டு மின் வாரியம்
சென்னை.

அப்பர் அருள்நெறிப் பதிப்பகம்
சென்னை 41.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவத் திருமணத் தமிழ் மந்திரங்கள்

## முன்னுரை

இந்நூல் திருமணச் சடங்குகளைச் செய்யும்போது ஓதுதற்குரிய தமிழ் மந்திரங்கள் கொண்ட திருமுறைப் பாடல்களைத் தருகிறது; உரிய வடமொழி மந்திரங்களையும் காட்டுகிறது.

### 1. தமிழ் மந்திரங்கள்

சிவநேசச் செல்வர்கள் நாள்தோறும் தங்கள் இல்லத்தில் தம் பொருட்டுச் செய்யும் (ஆன்மார்த்த) சிவ பூசை, திருக்கோயில்களில் பொது மக்கள் நலன் கருதிச் செய்யப்படும் (பரார்த்த) பூசைகள், சைவக் குடும்பங்களிற் செய்து வரும் சீமந்தம், ஜாதகர்மம், நாமகரணம், அன்னப்பிராசனம், சமய தீட்சை, திருமணம் ஆகியவை போன்ற பல கிரியைகளுக்குரிய மந்திரங்கள் தமிழில் இல்லை என்றே பலர் கருதி வருகின்றனர். சைவத் திருமுறைகளில் நம் நல்வாழ்வுக்குரிய எல்லா மந்திரங்களும் செறிந்து அமைந்து உள்ளன. இதற்கு ஒரு எடுத்துக் காட்டாக திருமணச் சடங்குகளுக்குரிய தமிழ் மந்திரங்களைக் கொண்ட திருமுறைப் பாடல்கள் இந்நூலிற் கொடுக்கப்பட்டுள்ளன.

சைவத் திருமணங்களிற் செய்ய வேண்டிய சடங்குகளில், அச்சடங்குகளுக்குரிய தெய்வங்களை உரிய மந்திர அருள்வாக்குகளைக் கொண்டு துதித்து வழிபாடு செய்தாலன்றி, அச்சடங்குகள் பயன் அளிக்கா. மேலும் அவ்வருள் வாக்குகளின் பொருளை உணர்ந்து ஓதுதலே மிக்க பயனைத் தரும். இதனைச் "சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார் செல்வர் சிவனடிக்கீழ்" மணிவாசகப் பெருந்தகையாரின் மணிவார்த்தையால் நாம் அறியலாம். மந்திரங்களின் பொருளை உணர்ந்து அவற்றை ஓதுதல் வேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டே இந்நூலில் தமிழ் மந்திரப் பாடல்கள் கொடுக்கப்படுகின்றன; வடமொழி மந்திரங்கள் கூடா எனல் கருத்தன்று.

## 2. மந்திரம் - மறைமொழி

மந்திரம் என்ற தமிழ்ச்சொல் பொருள் மறைந்துள்ள சொல்லை அல்லது சொற்றொடரைக் குறிப்பது. இதனை மறைமொழி என்பர்.

நிறைமொழி மாந்தர்தம் ஆணையிற் கிளக்கும்
மறைமொழி தானே மந்திரம் என்ப

என்பது தொல்காப்பியச் சூத்திரம். (பொருள் அதிகாரம், செய்யுள் இயல், *171*) இதற்கு 'நிறைந்த மொழியை உடைய மாந்தர் தமது ஆணையாற் சொல்லப்பட்ட மறைந்த சொல் மந்திரமாவது என்றவாறு' என இளம்பூரணர் உரை காண்பர்.

நிறைமொழி மாந்தர்தம் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்

என்று திருவள்ளுவ தேவரும் அருளிச் செய்வர் (குறள் 28). நிறை என்ற சொல்லுக்கு உறுதிப்பாடு, நிறைவு, மாட்சிமை, அழிவின்மை என்ற பொருள்கள் உண்டு. இந்த நான்கு பொருள்களையும் கொண்டு நிறைமொழி மாந்தர் என்றதற்கு நான்கு விதமாகப் பொருள் காண்பர். (*1*) உறுதிப்பாடு என்ற பொருளைக் கொண்டு உறுதியாகப் பலன்களைப் பயந்து விடும் மொழிகளையுடைய பற்றற்றார் என்று பரிமேலழகரும், (2) நிறைவு என்ற பொருளைக்கொண்டு நிறைந்த கல்வியுடையோர் என்று மணக்குடவரும், (3) மாட்சிமை என்ற பொருளைக்கொண்டு, பேரின்பத்தை அனுபவமாக உணர்ந்தோர் என்று காளிங்கரும், (4) அழிவின்மை என்ற பொருளைக் கொண்டு, குரு - சிஷ்ய பரம்பரையாக மறைமொழிகளை அழியாதவாறு உபதேசித்து வருபவர் என்றும் பொருள் காண்பர்.

எனவே, இவ்வுரைகளால் மந்திரம் என்பது

(i) உட்பொருள் வெளிப்படையாக உணரப்படாது மறைந்து கிடக்கும்படி தன்னுட்கொண்டு இருக்கும் 'மறைமொழி' என்றும்,

(ii) குருவால் உபதேசிக்கப்பட்டு சீடனால் முறைப்படி செபித்து (ஓதி) வரப்படுவது என்றும்,

(iii) பயின்று வரவர அது ஒருவரை பற்றற்றார் ஆக்குவது என்றும்,

(iv) இடைவிடாது பலநாள் பயின்றுவரின் பெரும் மாட்சிமையாகிய பேரின்பத்தைத் தரும் சாதனம் என்றும்,

(v) பற்றற்றுத்துப் பேரின்பத்தைத் தரும் சாதனம் என்றும் நாம் உணரலாம்.

## 3 மந்திரம் - காப்பது, அருள்வது

மந்திரம் என்ற வடமொழிச் சொல்லை 'மந்' 'த்ரம்' என்ற இரு பகுதிகளாகப் பிரித்துப் பொருள் காண்பர். 'மந்' என்பது 'மனனம்' என்ற சொல்லையும், 'த்ரம்' என்பது 'திராணம்' என்ற சொல்லையும் குறிப்பன. மனனம் - சிந்தித்தல், அல்லது எல்லாம் அறிதல்; திராணம் - காத்தல் அல்லது அருள் செய்தல். எனவே மந்திரம் என்பது (1) தன்னைச் சிந்திப்போரைக் காப்பது (2) தன்னைச் சிந்திப் போரது குறைகள், துன்பங்கள் ஆகியவற்றை நன்கு அறிந்து அவர்களின் நிலைக்குத் தக்கவாறு அவர்களுக்கு உலகியல் இன்பம், பேரின்பம் ஆகியவற்றை அருள்வது என்ற இரு பொருள்களைக் கொண்டது.

## 4. மந்திரம் - தேவதை கடவுள்

மந்திரங்களால் உணர்த்தப்படும் சிவபெருமான், அம்பாள் (சிவசத்தி), இவர்களின் அருளும், அதிகாரமும் பெற்ற தெய்வங்கள் (கடவுளர்) ஆகியோரே மந்திரங்கள்; காப்பவர்கள்; அருள் செய்பவர்கள். மந்திரம் என்ற சொல் மந்திரவாக்குக்களால் துதிக்கப்படும் மந்திர ஒலிகளைக் குறிப்பது அன்று. சிவலிங்கம் எவ்வாறு சிவபெருமானுக்குத் திருமேனி (உருவம்) ஆகிறதோ அது போன்று சிவமந்திரங்களும் அவனுக்குத் திருமேனியாகி அவனை உணர்த்தி நிற்பன. சிவலிங்கம் அருவுருவத் திருமேனி; மந்திரங்கள் அருவத் (உருவம் அற்ற) திருமேனி. மந்திரம் என்ற சொல் மந்திர வாக்குக்கு வழங்கி வருவது உபசாரமன்றி உண்மையன்று.

## 5 துணை செய்த நூல்கள்

சேக்கிழார் சுவாமிகள் அருளிச் செய்த பெரிய புராணத்திலும், கச்சியப்ப முனிவர் அருளிய தணிகைப்புராணம், பேரூர்ப் புராணம் ஆகிய இரு புராணங்களிலும் காட்டப்படும் திருமணச் சடங்கு முறைகளைத் தழுவி இந்நூலில் மந்திரப் பாடல்கள் அமைக்கப் பெற்றுள்ளன. மேலும், இந்நூல் அகோர சிவாசிரியர் அருளிய 'சைவ ஷோடசப் பிரகாசிகை'யிலும், 'கிரியாக்ரம த்யோதி'யிலும் காட்டப்

பெறும் வடமொழி மந்திரங்களைத் தழுவியது. இம்மந்திரங்களுக்கு நேர் ஒத்த தமிழ் மந்திரங்களைக் கொண்ட திருமுறைப் பாடல்கள இந்நூலில் தரப்படுகின்றன. மேலும், திருமுறைப் பாடல்களில் மந்திரங்கள் செறிந்துள்ளன என்பதனை உணர்த்தத் திருமுறை வாக்குகளுக்கு நேர் ஒத்த வடமொழி மந்திரங்களைச் சிவன், லலிதா, கணபதி, சுப்பிரமணியர் ஆகியோர்க்குரிய அஷ்டோத்திர சத நாமங்கள், சகஸ்ர நாமங்கள் ஆகியவற்றிலிருந்து எடுத்துச் சில பாடல்களின் குறிப்புகளிற் காட்டப்படுகின்றன.

## 6. மந்திரப் பாக்களை ஓதுதல்

திருமணச் சடங்குகளை மிகச்சிறிய ஒருகால அளவிற் செய்ய வேண்டிய நிலை இப்போது ஏற்பட்டுள்ளது. இந்நூலிற் காணப்படும் எல்லாத் திருமுறைப் பாடல்களையும் தேவார ஓதுவார் மூர்த்திகளைக் கொண்டு இசையோடு பாடுதற்கு வேண்டிய நேரம் கிடைப்பது அரிது. இப்பாடல்களைப் பாராயணமாக விரைவில் பாடலாம். இதனால் திருமணம் செய்து கொள்ளும் மணமக்களன்றி, இத்தமிழ் மறைகளைச் செவி சாய்க்கும் அன்பர்களும் பயன் பெறுவர்,

இச்சிறு நூல் திருமணச் சடங்குகளுக்குரிய தமிழ் மந்திரப் பாடல்கள் மட்டும் கொண்டது; சடங்குகளைச் செய்யும் முறைகள், அவற்றின் உண்மைத் தத்துவங்கள் ஆகியவை இதில் கொடுக்கப் படவில்லை. இந்நூலைக் கண்ணுறும் அன்பர்கள் தங்கள் கருத்துக்களை அறிவிப்பின், அவை பின்னர் வெளிவர இருக்கும் சைவத் திருமணச் சடங்குகள் பற்றிய விரிவான நூலுக்குத் துணை செய்யும்.

இந்நூலிற் காணப்படும் மந்திரப்பாடல்கள் சிவன் அருள் பெற்றுச் சிவமேயாக நின்ற திருமுறை ஆசிரியர்களால் அருளப் பெற்றவை. திருமணச் சடங்குகளுக்கன்றி, அன்றாட ஆன்மார்த்த பூசைக்கும், ஏனைய வழிபாடுகளுக்கும், திருக்கோயில்களிற் செய்யப்படும் வழிபாடுகளுக்கும் பயன்படுவன; தமிழ் மந்திரங் களாக அரச்சனைக்குப் பயன்படுவன. இவற்றை நாம் ஓதி இம்மை மறுமை இன்பங்களை எய்த இறைவன் அருள் பாலிப்பானாக.

4, டாக்டர் ராதாகிருஷ்ணன் நகர், ஆ. சுப்ரமணியன்
பிரதான சாலை,
சென்னை-600 041.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

1. சுற்றுநான் மறைகள் ஆர்ப்பத் தூரியம் சங்கம் ஏங்கக்
கற்றநான் முகத்தோன் வேள்விச் சடங்குநூல் கரைந்த ஆற்றுன்
முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல (கு) ஈன்றுள் செங்கை
பற்றினன் பற்று இலார்க்கே வீடருள் பரம யோகி.

— திருவிளையாடற் புராணம்,
தடாதகைப் பிராட்டி, திருமணப் படலம்,
பா 185.

2. பங்கயக் கிழவனே, பகர்ந்த நூல்முறை
செங்கனல் வளர்ப்பஅங் (கு) அருளிச் சேவுடை
அங்கணன் மலைமகள் மிடற்றில் ஆரருள்
மங்கல நாணினை வயங்கச் சாத்தினுன்

— காஞ்சிப்புராணம்,
காமாட்சி அம்மை திருமணப் படலம், பா 63

3. தந்தைதன் உருவ மான தழல்வலம் வந்து நின்று
கொந்தலர்க் குழலி நல்கக் குருஉப்பொரி ஏற் (று) அங் (கு) அட்டிச்
சுந்தர அணையின் வைகிச் சுடர்ந்தமங் கிலிய நன்னுண்
கந்தரம் கவின யாத்தான் களித்தன உலகம் எல்லாம்.

— பேரூர்ப்புராணம்,
தெய்வயானை திருமணப்படலம், பா 127.

4. பொரிஎரி மனைவி அட்ட உடன்நின்று போந்து முன்போல்
எரிமணித் தவிசில் வைகி இலங்குமங் கலநாண் வாங்கித்
தெரிவைதன் மிடற்றில் தேவ துந்துமி முழங்க யாத்தான்
பிரமனும் உற்ற அங்கி வினையினைப் பிறக்கி இட்டான்

— தணிகைப் புராணம்,
வள்ளிநாயகி திருமணப்படலம் படலம், பா. 172

# பொருள் அடக்கம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சைவத் திருமணத் தமிழ் மந்திரங்கள்

## 1 தமிழ் மந்திரங்கள்

### 1. கடவுள் வணக்கம்

#### 1. 1 கணபதி வணக்கம் :

1. திருவாக்கும்; செய்கருமம் கைகூட்டும்; செஞ்சொல்
பெருவாக்கும்; பீடும் பெருக்கும் — உருவாக்கும்
ஆதலால் வானோ நம் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவர் தம் கை

— கபில தேவர், மூத்த நாயனார்
இரட்டை மணிமாலை, பா. 1.

2. வேட்கை வினைமுடித்து மெய்யடியார்க் கின்பம்செய்(து)
ஆட்கொண் டருளும் அரன்சேயை — வாட்கதிர்கொள்
காந்தார மார்பில் கமழ்தார்க் கணபதியை
வேந்தா உடைத் தமரர் விண்,

— ஷ, பா. 15.

#### 1. 2 சிவபெருமான் உமாதேவியார் வணக்கம் :

3. சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி
சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி
பொங்கரவா நின்பாதம் போற்றி போற்றி
புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி
அங்கமலத்(து) அயனோடு மாலும் காணா
அனல் உருவா நின்பாதம் போற்றி போற்றி
செங்கமலத் திருப்பாதம் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி.

— திருநாவுக்கரசு நாயனார், திருவாரூர்ப்
போற்றித் திருத்தாண்டகம், பா. 6. (6 : 32. 6)

### 1. 3. குமரவேள் வணக்கம் :

4. மாலுலா மனம்தந்(து) என்கையிற் சங்கம்
வவ்வினான்; மலைமகள் மதலை;
மேலுலாம் தேவர் குலமுழு தாளும்
குமரவேள்; வள்ளிதன் மணாளன்;
சேலுலாம் கழனித் திருஇடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாம் தடக்கை வேந்தன் என்சேந்தன்
என்னும்என் மெல்லியல் இவளே

— சேந்தனார் திருவிசைப்பா :
திரு இடைக்கழி, பஞ்சமம், 1

### 1. 4 திருவிளக்கு வணக்கம்:

5. எல்லா உலகமும் ஆனாய் நீயே
ஏகம்ப மேவி இருந்தாய் நீயே
நல்லாரை நன்மை அறிவாய் நீயே
ஞானச்சுடர்விளக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
புகழ்ச் சேவடி என்மேல் வைத்தாய் நீயே
செவ்வாய் செல்வம் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ

— திருவையாற்றுத் திருத்தாண்டகம்-7
(6 38. 7)

## 2. மணமகன் சடங்குகள்

### 2. 1. தேசிகர் (மணமகனைத் தன் அருகில் உட்கார வைத்து) திருநீற்றினை மந்திரித்தல் :

6. பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவர் உள்ளத்து) அமுதே போற்றி

— திருவாசகம், போற்றித் திருஅகல், *137-142*

2.2 தேசிகர் மணமகனுக்குத் திருநீறு அளித்தல் :

7. வேதத்தில் உள்ளது நீற ; வெந்துயர் தீர்ப்பது நீறு
போதம் தருவது நீறு; புன்மை தவிர்ப்பது நீறு;
ஓதத் தகுவது நீறு; உண்மையில் உள்ளது நீறு;
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருஆல வாயான் திருநீறே.
— திருஞான சம்பந்தர், திருநீற்றுப்
பதிகம், சாந்தாரம்,-2 (2. 66. 2)

2.3: மணமகன் திருநீறு அணிதல் :

மணமகன் தேசிகர் அளித்த திருநீற்றைப்பெற்று, 'சிவாயநம என்ற திருவைந்தெழுத்தை (சிவமூலமந்திரத்தை) ஓதி நெற்றியில் அணிதல் :

8. கருவாய்க் கிடந்துன் கழலே நினையும்
கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்(து)உன்றன் நாமம் பயின்றேன்
உனதருளால்
திருவாய்ப் பொலிய சிவாயநம என்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூர்அரனே.
— அப்பர், திருப்பாதிரிபுலியூர்,
திருவிருத்தம்-6(4. 94. 6)

2.4. மணமகன் முளை தெளித்தல் (அங்குராப்பணம்) :

இக்கிரியையில், எருந்தூள் அல்லது பசுஞ்சாணம் மண், மணல் ஆகியவற்றைக் கலந்து, 12 பாலிகைகளில் இட்டு, அவற்றில் செந்நெல், உளுந்து, பயிறு, கடுகு எள்ளு, கொள்ளு, மொச்சை ஆகியவற்றை விந்தி. முறைப்படி மந்திரங்களை ஓதி, சந்திர கும்பநீர் பாலிகைகளில் தெளிக்கப்படும்.

அ. கும்பத்தில் சந்திர வணக்கம்:

9. மாலை எழுந்த மதியே போற்றி
மன்னிஎன் சிந்தை இருந்தாய் போற்றி
மேலை வினைகள் அறுப்பாய் போற்றி
மேலாடு திங்கள் முடியாய் போற்றி
ஆலைக் கரும்பின் தெளிவே போற்றி
அடியார்கட் காரமுதம் ஆனாய் போற்றி
காலை முளைத்த கதிரே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
— திருக்கயிலைத் திருத்தாண்டகம் 2, பா. 3 (6. 56.3)

ஆ, மூலைப்பாலிகைகளில் பன்னிரு சூரியர் வணக்கம்:

10. போற்றிசைத்துன் அடிபரவ நின்றாய் போற்றி
புண்ணியனே நண்ணலரிய யாய் போற்றி
ஏற்றிசைக்கும் வான்மேல் இருந்தாய் போற்றி
எண்ணுயிர நூறு பெயராய் போற்றி
நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி
நான்முதற்கும் மாற்கும் அரியாய் போற்றி
காற்றிசைக்கும் திசைக்கெலாம் வித்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

— திருக்கயிலாயம் போற்றித்
திருத்தாண்டகம் (6 57 9)

## 2. 5. மணமகனுக்குக் காப்புக் கட்டுதல்

அ. காப்புக் கயிற்றை மந்திரித்தல்.

11. பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி அறுக்கும் பிரானே போற்றி
வைச்சாடல் நன்று மகிழ்ந்தாய் போற்றி
மருவிஎன் சிந்தை புகுந்தாய் போற்றி
பொய்ச்சார் புரமூன்றும் எய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாகம் அசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

— திருக்கயிலாயப் போற்றித்
திருத்தாண்டகம்-1, பா-2 (6 55. 6)

ஆ. தேசிகர் கவச மந்திரம் ஓதி மணமகனது வலது கையில் காப்பு நாண் சாத்துதல்:

12. பூவார்ந்த சென்னிப் புனிதா போற்றி
புத்தேளிர் போற்றும் பொருளே போற்றி
தேவார்ந்த தேவர்க்கும் தேவே போற்றி
திருமாலுக் காழி அளித்தாய் போற்றி
சாவாமே காத்தென்னை ஆண்டாய் போற்றி
சங்கொத்த நீற்றெம் சதுரா போற்றி
சேவார்ந்த வெல்கொடியாய் போற்றி போற்றி
திருமூலட் டானனே போற்றி போற்றி

— திருவாரூர்த் திருத்தாண்டகம்-9
(6.32. 9)

13. ஆர்வ மிக்கெழும் அன்பினுல் மலரயன் அனைய
சீர்மறைத்தொழில் சடங்குசெய் திருந்துநூல் முனிவர்
பார்வ ழிப்பட வரும்இரு வினைகளின் பந்தச்
சார்பொ ழிப்பவர் திருக்கையில் காப்பு நாண் சாத்த
—பெரியபுராணம் ஞானசம்பந்தர்,
புராணம், பா-1187

2 6. தேசிகர் மணமகனுக்கு ஆடை, மாலை முதலிய ஆசீர்வதித்துக் கொடுத்தல்:

இதற்குரிய மந்திரம் சிவமூலமந்திரம் (அகோர சிவாசாரியார் சைவ ஷோடசப் பிரகாசிகை)

14 போற்றிஎன் போலும் பொய்யர் தம்மைஆட்
கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப் புதுமது, புவன நீர்தீக்
காற்றய மானன் வானம் இருசுடர்க் கடவுளானே.
— திருவாசகம் சதகம். -63. (8. 67)

## 3. மணமகள் சடங்குகள்

3. 1. மணப்பெண்ணைத் தன் அருகில் வைத்துத் தேசிகர் திருநீற்றினை மந்திரித்தல்.

15. செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி
செல்லாத செல்வம் உடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி
ஆகாய வண்ணம் உடையாய் போற்றி
வெய்யாய் தணியாய் அணியாய் போற்றி
வேளாத வேள்வி உடையாய் போற்றி
கையார் தழலார் விடங்கா போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
— திருக்கயிலாயப் போற்றித் திருத்தாண்டகம்,
பதிகம்-3, பா-3. (6. 57.3)

3. 2. மணப்பெண்ணுக்கு தேசிகர் திருநீறு அளித்தல் :

16. இராவணன் மேலது நீறு ; எண்ணத் தகுவது நீறு ;
பராவணம் ஆவது நீறு ; பாவம் அறுப்பது நீறு ;
தராவணம் ஆவது நீறு, தத்துவம் ஆவது நீறு ;
அராஅணங் கும்திரு மேனி ஆலவாயான் திருநீறே.

— சம்பந்தர், திருநீற்றுப்பதிகம்,
காந்தாரம் – பா. 8. (2. 66 8,)

3. 3. மணப்பெண் திருநீற்றினைப் பெற்று மூலமந்திரம் ஓதி அணிதல்:

17. கருவாய்க் கிடந்துன் கழலே நினையும் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றன் நாமம் பயின்றேன்
உனதருளால்
திருவாய்ப் பொலிய சிவாயநம என்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதி நீபா திரிப்புலி யூர்அரனே.

—அப்பர், திருப்பாதிரிப்புலியூர், திருவிருத்தம், 6 (4. 94. 5.)

3. 4. மணப்பெண் மூனை (தளித்தல் :

அ. சந்திரகும்பத்தில் வணக்கம் ;

18, ஆட்சி உலகை உடையாய் போற்றி
அடியார்கட் கமுதெலாம் ஈவாய் போற்றி
சூட்சி சிறிதும் இலாதாய் போற்றி
சூழ்ந்த கடல்நஞ்சம் உண்டாய் போற்றி
மாட்சி பெரிதும் உடையாய் போற்றி
மன்னி என்சிந்தை மகிழ்ந்தாய் போற்றி
காட்சி பெரிதும் அரியாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

—கயிலை, போற்றித் திருத்தாண்டகம் 3,4. (6. 57, 4 )

ஆ. மூலைப்பாலிகைகளில் பன்னிரு சூரியர் வணக்கம் :

19 உடலின் வினைகள் அறுப்பாய் போற்றி
ஒள்ளெரி வீசும் பிரானே போற்றி
படரும் சடைமேல் மதியாய் போற்றி
பல்கணக் கூத்தப் பிரானே போற்றி
சுடரில் திகழ்கின்ற சோதீ போற்றி
தோன்றிஎன் உள்ளத் திருந்தாய் போற்றி
கடலில் ஒளியாய முத்தே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி

—கயிலை, போற்றித் திருத்தாண்டகம் 2; 4 (6. 56. 4)

**ந. 5. தேசிகர் மணப்பெண்ணுக்குக் காப்பு நாண் சாத்துதல் :**

அ. காப்பு நாணை மந்திரித்தல் :

20. பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்துஞ் சொல் ஆனாய் போற்றி
என் சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனும் தீ ஆனாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

— கயிலை, போற்றித் திருத்தாண்டகம்
பதிகம் 1. பா. 7 (6 55. 7)

ஆ. தேசிகர் மணப்பெண்ணின் இடது கையில் காப்பு நாண் அணிதல் :

21. சாம்பர் அகலத் தணிந்தாய் போற்றி
தவநெறிகள் சாதித்து நின்றாய் போற்றி
கூம்பித் தொழுவார்தம் குற்றே வலைக்
குறிக்கொண் டிருக்கும் குழகா போற்றி
பாம்பும் மதியும் புனலும் தம்மில்
பகைதீர்த் துடன்வைத்த பண்பா போற்றி
ஆம்பல் மலர்கொண் டணிந்தாய் போற்றி
அலைகெடில வீரட்டத் தாள்வாய் போற்றி.

— திருவதிகை, போற்றித் திருத்தாண்டகம், 4
(6 5. 4)

22. முற்றுமெய்ஞ் ஞானம்பெற்ற மூர்த்தியார் செங்கை பற்ற
நற்பெரும் தவத்தின் நீர்மை நலம்படைத் தெழுந்த தெய்வக்
கற்பகப்பூங் கொம் பன்னார் தம்மையும் காப்புச் சேர்த்து
பொற்புறு சடங்கு முன்னர்ப் புரிவுடன் செய்த வேலை.

— பெரியபுராணம், ஞான சம்பந்தர் புராணம் - 1222.

3. 6. தேசிகர் மணப்பெண்ணுக்கு ஆடை, மாலை முதலியன ஆசிர்வதித்து அளித்தல் :

23. தீர்ந்த அன்பாய அன்பர்க் கவரினும் அன்ப போற்றி
பேர்ந்தும் என்பொய்மை ஆட்கொண் டருளிடும் பெருமை போற்றி
வார்ந்த நஞ்சயின்று வானோர்க் கமுதருள் வள்ளல் போற்றி
ஆர்ந்த நின்பாதம் நாயேற் கருளிட வேண்டும் போற்றி.

— திருவாசகம், திருச்சதகம், பா. 69 (8 73)

## 4. வேள்வித் தீ ஓம்புதல்

4. 1. வேள்வித் தீ வளர்த்து, அதில் சதாசிவ மூர்த்தியை ஐந்து பிரம மந்திரங்களாலும் அர்ச்சித்தல் :

24. எல்லாம் சிவன்என நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாட் படையாய் போற்றி
கொல்லும் கூற்(று) ஒன்றை உதைத்தாய் போற்றி
கல்லாதார் காட்சிக்கு அரியாய் போற்றி
கற்றார் இடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியன்அரணம் எய்தாய் போற்றி
வீட்டம் காதல் விமலா போற்றி.

—திருவதிகை வீரட்டானம் போற்றித் திருத்தாண்டகம், பா. 1. (6.5 1)

4. 2. வேள்வித் தீயில் இறைவனை ஆறு அங்க மந்திரங்களால் அர்ச்சித்தல் :

25. முல்லையம் கண்ணி முடியாய் போற்றி
முழுநீறு பூசிய மூர்த்தீ போற்றி
எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி
ஏழ்நரம்பின் ஓசை படைத்தாய் போற்றி
சில்லைச் சிரைத்தலையில் ஊணா போற்றி
சென்றடைந்தார் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி
தில்லைச்சிற் றம்பலம் மேயாய் போற்றி
திருவீரட் டானத்தெம் செல்வா போற்றி.

—திருவதிகை போற்றித் திருத்தாண்டகம், பா. 3. 6 5. 3.)

## 5. ஊசல்:

மணமக்கள் ஊஞ்சலாடுதல்:

26. நஞ்சமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்
மஞ்சதோய் மாடமணி உத்தர கோசமங்கை
அஞ்சொலாள் தன்னொடும் கூடி அடியவர்கள்
நெஞ்சுளே நின்(று)அமுதம் தூறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்
புஞ்சமார் பொன்வளையீர் பொன்னூசல் ஆடாமோ.

—திருவாசகம், பொன்னூசல் 4. (8. 330.)

## 6. மணமகள் மணமகனுக்கு மாலையிடல்:

பெண் வலம் வந்து திருவைத்தெழுந்தோதி மணமகனுக்கு மாலை இடல்:

27. ஒருவனே போற்றி ஒப்பில் அப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி எங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகஎன் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் தனிமை தீர்த்தே.

—திருவாசகம், திருச்சதகம், 68 (8. 72)

## 7. மணமக்கள் பெற்றோர் பாதம் வணங்குதல்:

அ. மணமகன் தனது பெற்றோரைச் சிவபெருமானும் உமையம்மையுமாகப் பாவித்து, அவர்களது பாதங்களை விளக்கித் தொழுது, பாதநீரைச் சிரசில் தெளித்துக் கொள்ளல்.

28. அணியனவும் சேயனவும் அல்லா அடி
அடியார்கட் காரமுதம் ஆயஅடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லஅடி
பற்றற்றார் பற்றும் பவளஅடி
மணியடி பொன்னடி மாண்பாம்அடி
மருந்தாகிப் பிணிதீர்க்க வல்லஅடி
தணிபாடு தண்கெடில நாடன் அடி
தகைசார் வீரட்டத் தலைவன்அடி.

—திருவதிகை, திருத்தாண்டகம், 9. (6. 6. 9)

ஆ மணப்பெண் அவ்வாறே தனது பெற்றோர் பாதங்களை வணங்குதல்.

29 திருமகட்குச் செந்தா மரையாம்அடி
சிறந்தவர்க்குத் தேனாய் விளைக்கும்அடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றஅடி
புகழ்வார் புகழ்தகைய வல்லஅடி
உருவிரண்டும் ஒன்றோடொன் றொவ்வாஅடி
உருவென் றுணரப் படாதஅடி
திருவதிகைத் தென்கெடில நாடன்அடி
திருவீரட் டானத்தெஞ் செலவன்அடி
—திருவடித் திருத்தாண்டகம், பா-6. (6. 6. 6)

## 8. மங்கல நாண் ஆசீர்வாதம் :

திருமண மண்டபத்தில் குழுமியிருக்கும் பெரியோர்கள் மங்கல நாணை ஆசீர்வதிக்கும் போது ஓதற்குரிய பாடல்கள்:

30. நினைவார்நினைய இனியான்பனியார் மலர்தூய்நித்தலும்
கனையார்வினடஒன் றுடையான்கங்கை திங்கள்கமழ் கொன்றை
புனைவார்சடையின் முடியான்கடல்சூழ் புறவம்புதியாக
எனை ஆள்உடையான் இமையோர்ஏத்த உமையோ டிருந்தானே.
— சம்பந்தர், திருப்புறவம் (சீகாழி தக்கேசி, பா.4. (1. 74. 4)

31. செல்வம் மல்கு திருமங் கலக்குடி
செல்வம் மல்கு சிவநிய மத்தராய்ச்
செல்வம் மல்கு செழுமறை யோர்தொழச்
செல்வன் தேவி யொடுந்திகழ் கோயிலே.
— அப்பர், திருமங்கலக்குடித் திருக்குறுந்தொகை பா. 5 (5. 73. 5)

## 9: ஓமம் :

32. போற்றிஇப் புவன நீர்தீக் காலொடு வானம் ஆனாய்
போற்றிஎவ் வுயிர்க்கும் தோற்றம் ஆகிநீ தோற்றம் இல்லாய்
போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈறாய் ஈறின்மை ஆனாய்
போற்றிஐம் புலன்கள் நின்னைப் புணர்கிலாப் புணர்க்கை யானே
— திருவாசகம், திருச்சதகம், 77. (8. 74)

## 10. தாரை வார்த்தல்.

பெண்ணின் பெற்ருேர் தாரை வார்த்துப் பெண்ணை ஈதல்.

33. பெருகொளி ஞானம் உண்ட பிள்ளையார் மலர்க்கை
தன்னில்
மருவுமங் கலநீர் வாசக் கரகமுன் ஏந்தி வார்ப்பார்,
தருமுறைக் கோத்தி ரத்தின் தம்குலம் செப்பி,
''என்றன்
அருநிதிப் பாவை யாரைப் பிள்ளையார்க் களித்தேன்'
என்ருர்.
— பெரியபுராணம், ஞானசம்பந்தர் புரா. 1235.

## 11. திருமங்கல நாண் பூட்டுதல்.

அ. மணமகன் 'ஓம் உமாமகேச்வராய நம' என்ற மந்திரத்தை மும்முறை ஓதி மணப்பெண்ணின் கழுத்தில் திரு மங்கல நாண் பூட்டுதல். (திருமண மண்டபத்தில் குழுமி உள்ள பெரியோர்களும் இம்மந்திரத்தை திருமங்கல நாண் தரிக்கும் போது ஓதுதல் நன்று)

34. நீறேறு நீல மிடற்ருய் போற்றி
நிழல்திகழும் வெண்மழுவாள் வைத்தாய் போற்றி
கூறேறு உமைஒருபால் கொண்டாய் போற்றி
கோள்அரவம் ஆட்டும் குழகா போற்றி
ஆறேறு சென்னி உடையாய் போற்றி
அடியார்கட் காரமுதம் ஆனுய் போற்றி
ஏறேறி எங்கும் உகப்பாய் போற்றி
இருங்கெடில வீரட்டத் தெந்தாய் போற்றி
— திருவதிகைப் போற்றித் திருத்தாண்டகம்,
பா. 5. (6 5. 5)

35, இமையா(து) உயிரா திருந்தாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
உமைபாகம் ஆகத் தணைத்தாய் போற்றி
ஊழி ஏழான ஒருவா போற்றி
அமையா வருநஞ்சம் ஆர்ந்தாய் போற்றி
ஆதி புராணனுய் நின்ருய் போற்றி
கமையாகி நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி,
— கயிலைப் போ. திருத் 1, 8 (6 55 8)

ஆ. மணமகன் " ஓம் சிவாய நம" எனச் சிவமூல மந்திரம் ஓதி, திருமங்கல நாண்முடியின் மேல் திருநீறிட்டு, மணப்பெண்-ணின் நெற்றியிலும் திருநீறு இடல்.

36. முடியார் சடையின் மதியாய் போற்றி
முழுநீறு சண்ணித்த மூர்த்தி போற்றி
துடியார் இடைஉமையாள் பங்கா போற்றி
சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி
அடியார் அடிமை அறிவாய் போற்றி
அமரர் பதிஆள வைத்தாய் போற்றி
கடியார் புரம்மூன்றும் எய்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி
— திருக்கயிலாயம், போற்றித் திருத்தாண்டகம், 3
பா 8. (6. 57. 8)

37. எம்பிரான் போற்றி; வானத் தவர்அவர் ஏறு போற்றி;
கொம்பரார் மருங்குல் மங்கை கூற வெண்நீற போற்றி;
செம்பிரான் போற்றி; தில்லைச் சிற்றம்பலவ போற்றி;
உம்பரா போற்றி; என்னை ஆளுடை ஒருவ போற்றி.
— திருவாசகம், திருச்சதகம், பா. 67 (8 71)

## 12. வேள்வித்தீ அர்ச்சனை:

வேள்வித்தீயைத் திருமேனியாக் கொண்ட இறைவனுக்குத் திருமுறை அர்ச்சினை:

38. எரிபெருக்குவர் அவ்வொளி ஈசன(து)
உருவருக்கம தாவது(து) உணர்கிலார்
அரிஅயற்கரி யானை அயர்த்துப் போய்
நரி விருத்தம தாகுவர் நாடரே.
— அப்பர், ஆதி புராணத்
திருக்குறுந்தொகை 7. (5. 100 7)

39. நிலம்நீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்து நின்றான்
உலகேழ்எனத்திசை பத்தெனத்தான் ஒருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ.
— திருவாசகம், தோணோக்கம், பா. 5, (8. 317)

40. இடர்கெடுத் தென்னை ஆண்கொண்(டு) என்னுள்
இருட்பிழம் பறஎறிந் தெழுந்த
சுடர்மணி விளக்கின் உள்ளொளி விளங்கும்
தூயநற் சோதியுட் சோதீ!
அடல்விடைப் பாகா! அம்பலக் கூத்தா!
அயனொடு மால்அறி யாமைப்
படர்ஒளி பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியுமா பணியே.

—திருமாளிகைத் தேவர், திருவிசைப்பா,
கோயில் 2 (9.1.2)

41. முக்கணன் தானே முழுச்சுடர் ஆயவன்;
அக்கணன் தானே அகிலமும் உண்டவன்;
திக்கணன் ஆகித் திசைஎங்கும் கண்டவன்;
எக்கணன் தானுக்கும் எந்தை பிரானே,

— திருமந்திரம், நாலாம் தந்திரம்,
ஓம குண்டம், பா. 11. (10,10 25)

42. நீரே எருதேறும் நின்மலனுர் ஆவீரும்
நீரே நெடுவானில் நின்றீரும் — நீரே
நெருப்பாய தோற்றத்து நீள் ஆறும்பூண்டு
நெருப்பாய தோற்றம் நீலத்து.

— பரண தேவர், சிவபெருமான்
திருவந்தாதி (2. 11. 23 72)

43 அஞ்செழுத் தோதி அங்கி வேட்டுநல் வேள்வி எல்லாம்
நஞ்சணி கண்டர் பாதம் நண்ணிடச் செய்து ஞாலத்(து)
எஞ்சலில் அடியார்க் கென்றும் இடையரு
அன்பால் வள்ளல்
தஞ்செயல் வாய்ப்ப ஈசர் தாள்நிழல் தங்கினுரே

— பெரிய புராணம், சிறப்புலி
நாயனுர் புராணம், பா. 5

## 13. அடி எடுத்து அம்மியிடல்

மணமகன் மணப்பெண்ணின் இடது பாதத்தைத் தனது இரு கைகளாலும் எடுத்து சிவகாயத்திரி மந்திரத்தை ஓதி அம்மியின் மேல் இடல்.

44. சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
தேவர் அறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
போதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறும் நின்றாய் போற்றி
பற்றி உலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.
— திருக்கயிலாயம், போற்றித் திருத்தாண்டகம்
பதிகம் 1, பா. 6 (6. 55. 6)

## 14. வாழ்த்து

45. மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்; வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதுமோர் குறைவிலை;
கண்ணின் நலஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே.
— சம்பந்தர், திருக்கழுமலம் (சீகாழி)
கொல்லி, பா, 1. (3. 24. 1)

46. என்றும் இன்பம் பெருகும் இயல்பினால்
ஒன்று காதலித் துள்ளமும் ஓங்கிட
மன்று ளார்அடி யார்அவர் வான்புகழ்
நின்ற தெங்கும் நிலவி உலகெலாம்.
—பெரிய புராணம், வெள்ளானைச்
சருக்கம் - பா 58.

47. வையம் நீடுக; மாமழை மன்னுக;
மெய் விரும்பிய அன்பர் விளங்குக;
சைவ நன்னெறி தாம்தழைத் தோங்குக;
தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே.
—பெரிய புராணப் பழைய ஏட்டுப் பிரதி
ஒன்றில் உள்ள வாழ்த்துப் பாடல்,

திருச்சிற்றம்பலம்

## 2. வடமொழி மந்திரங்கள்:

அ, திருமணச் சடங்குகளுக்குரிய வடமொழி மந்திரங்கள்.

1. கணபதி மந்திரம் — ஓம் கணபதயே நம:
2. சிவ மூல மந்திரம் — ஓம் சிவாய நம:
3. சத்தி மந்திரம் — ஓம் சக்தயே நம:
4. உமாமகேச்வர மந்திரம் — ஓம் உமாமகேச்வராய நம:
5. ஸ்கந்த மந்திரம் — ஓம் ஸ்கந்தாய நம:
6. பிரம மந்திரங்கள்
   - i ஓம் ஈசான மூர்த்தநே நம:
   - ii ஓம் தத்புருஷவக்த்ராய நம:
   - iii ஓம் அகோர ஹ்ருதயாய நம:
   - iv ஓம் வாம தேவ குஹ்யாய நம:
   - v ஓம் ஸத்யோஜாத மூர்த்தயே நம:
7. சிவ காயத்ரீ மந்திரம் — ஓம் தந்மஹேசாய வித்மஹே,<br>வாக் விசுத்தாய தீமஹி<br>தந்நः சிவः ப்ரசோதயாத்
8. அங்க மந்திரங்கள்
   - i ஓம் ஹ்ருதயாய நம:
   - ii ஓம் சிரசே நம:
   - iii ஓம் சிகாயை நம:
   - iv ஓம் கவசாய நம:
   - v ஓம் நேத்ரேப்யோ நம:
   - iv ஓம் அஸ்த்ராய நம:
9. அட்ட மூர்த்த மந்திரங்கள்
   - i ஓம் சர்வாய தேவாய நம:
   - ii ஓம் பவாய தேவாய நம:
   - iii ஓம் ருத்ராய நம:
   - iv ஓம் உக்ராய தேவாய நம:
   - v ஓம் பீமாய தேவாய நம,
   - vi ஓம் மஹாதே தேவாய நம
   - vii ஓம் ஈசாநாய தேவாய நம:
   - viii ஓம் பசுபதே தேவாய நம:

10. கலா மந்திரங்கள்
i ஓம் நிவ்ருத்தி கலாயை நம :
ii ஓம் ப்ரதிஷ்டா கலாயை நம :
iii ஓம் வித்யா கலாயை நம :
iv ஓம் சாந்தி கலாயை நம :
v ஓம் சாந்தியதீத கலாயை நம :

11. முகூர்த்த தெளிப்பதற்கு மந்திரங்கள் :
அ. சந்திர மூர்த்தி மந்திரம் – ஓம் அம்ருதேச்வராய நம :
ஆ. பன்னிரு சூரிய மந்திரங்கள் :
i ஓம் வைகர்த்த நாயநம :
ii ஓம் விவஸ்வதே நம :
iii ஓம் மார்த்தாண்டாய நம :
iv ஓம் பாஸ்கராய நம :
v ஓம் ரவயே நம :
vi ஓம் லோகப்ரகாசாய நம :
vii ஓம் லோக சாக்ஷிணே நம :
viii ஓம் த்ரிவிக்ரமாய நம :
ix ஓம் ஆதித்யாய நம :
x ஓம் சூரியாய நம :
ix ஓம் அம்சுமாலிதே நம :
xii ஓம் திவாகராய நம :

12. மங்கல நாண் காப்பு மந்திரங்கள் :
i ஓம் ஆத்மதத்வாய நம :
ii ஓம் வித்யாதத்வாய நம :
iii ஓம் சிவதத்வாய நம :

13. ஏழு மந்திர இறுதிகள் :
(சப்த கோடி மகா மந்திரங்கள்) :
i நம : (போற்றி)
ii ஸ்வாஹா. (காண்க)
iii வெளஷட். (போலும்)
iv ஸ்வதா. (வாழ்க)
v விஷட். (தோன்றும்)
vi ஹூம். (தாமே)
vii பட். (வெல்க)

# 3. தமிழ் மந்திரங்களும் அவற்றிற்குரிய விளக்கக் குறிப்புகளும்

## 1. கணபதி மந்திரங்கள்

பா-1. ஏழு இறுதிகளை உடைய வடமொழி மந்திரங்களைத் தேவாரம், திருவாசகம், பட்டினத்தடிகள் (பதினொன்றும் திருமுறைப்) பாடல்கள் ஆகியவற்றில் காணலாம். இப்பாடலில் 'காதலால் கை கூப்புவர்' என்ற இறுதித் தொடர் நம:' என்ற வடமொழி மந்திர இறுதி. நாம் கைகூப்பி நிற்கும்போது புறச் செயல்களைப் புரியும் நம் கைகள் வேறு ஒரு செயலும் இன்றி இறைவனை வணங்கி நிற்கின்றன. நமது மனம், வாக்கு, காயம் (உடம்பு) ஆகிய மூன்றையும் வேறு ஒன்றிலும் செலுத்தாது, நினைத்தல், அவர் திருநாமத்தினை ஓதுதல், அவர் பணியைச் செய்தல் ஆகிய செயல்களில் ஈடுபடுதலையே 'கைகூப்புதல்' என்ற சொல் உணர்த்துகிறது. இவ்வாறு கைகூப்பி, மனம் வாக்குக் காயங்கள் இறைவன் மாட்டுச் செலுத்தி நிற்கும் போதும், அவன்பால் அன்பே மிக்கு ஓங்கி நிற்றல் வேண்டும் என்பதைக் 'காதலால்' என்ற சொல் உணர்த்துகிறது. காதல் - அன்பு.

இத்திருப்பாடலில் (1) திருஆக்கும், (2) செய்கருமம்கைகூட்டும், (3) செஞ்சொற் பெருவாக்கும் பெருக்கும், (4) பீடும் பெருக்கும், (5) உருவாக்கும் என்ற ஐந்திணையும் 'ஆனை முகத்தானைக் காதலால் கூப்புவர் தம் கை' என்னும் சொற்றொடருடன் இணைத்து ஐந்து தமிழ் மந்திரங்களாகக் கொள்ள வேண்டும் இத்தமிழ் மந்திரங்களும் அவற்றிற்கு நேரொத்த வடமொழி மந்திரங்களும் கீழே தரப்படுகின்றன. பின்னர் வரும் ஏனைய பாடல்களில் உள்ள மந்திரங்களும் அவற்றிற்கு நேரொத்த வடமொழி மந்திரங்களும் இவ்வாறே கொடுக்கப்படுகின்றன. பாடல்களில் காட்டப்படும் தமிழ் மந்திரங்கள் எவ்வாறு அந்தந்த வடமொழி மந்திரங்களை ஒப்பனை என்பதனை விளக்கச் சுருக்கமாகச் சில குறிப்புகளும் இப்பகுதியில் தரப்படுகின்றன,

(1) திரு ஆக்கும் ஆனை முகத்தானைக் கைகூப்புவர் :

1. ஓம் முக்திதாய நம : என்ற கணபதி சகஸ்ர நாமம். (கண - சக - 65) திரு - முக்தியாகிய செல்வம், பேரின்பச் செல்வம். இத்திருவை பேரின்பச் செல்வத்தை) ஆக்குபவர் அளிப்பவர்) கணபதி.

2. ஓம் நிதிபதயே நம ; (கண சக - 78) ஈண்டு நிதி - உலக வாழ்க்கைக்கு வேண்டிய செல்வங்கள் நிதிப்பதி – செல்வங்களுக்கு அரசனாக (தலைவராக) இருந்து செல்வங்களை அன்பர்களுக்கு அருள்பவர் கணபதி.

(2) செய்கருமம் கைகூட்டும் ஆனை முகத்தானைக் கை கூப்புவர் :

ஓம் ஸித்திபதயே நம: (கண - சக - 49)

(3) பெருவாக்கு பெருக்கும் ஆனை முகத்தானைக் கைகூப்புவர்' இது பின்வரும் பத்து வடமொழி மந்திரங்களாகத் திகழ்கிறது:

1. ஓம் மந்தராய நம. (கண-சக-595) பெருவாக்கு-பெருமை (மாட்சிமை) உடைய வாக்காய மந்திரம். (மந்திரம் - மந்திர வாக்குகளை உணர்த்தும் அதி தெய்வமாக நிற்கும் கணபதி)

2. ஓம் மந்த்ர பதயே நம : (கண சக 596) பெருவாக்கு-மந்திரங்களின் உட்பொருளாகிய கணபதி. மந்திர தெய்வங்களுக்குள் உயிர்க்குயிராய் நின்று அத்தெய்வங்களைத் தொழிற்படுத்தும் தலைவர் கணபதி.

3. ஓம் ஓங்காராய நம : (கண. சக 437) பெருவாக்கு — மந்திரங்களில் தலையாய ஓங்கார மந்திர வடிவினராகிய கணபதி. பிரணவத்தை (ஓங்காரத்தை) வடிவாகக் கொண்டவர் என்பதை அவரது துதிக்கை உணர்த்துகிறது.

4, ஓம் ஓங்கார வாச்சியாய நம : (கண. சக 436) ஈண்டு பெருவாக்கு - ஓங்கார மந்திரத்தின் உட்பொருள்; பிரணவத்தின் உட்பொருளாக நின்று பயனைத் தரும் கணபதி,

5. ஓம் நாதாய நம : (கண-சக-122) பெருவாக்கு — ஒலிகளுக்குக் காரணமான அபர நாதம்

6. ஓம் மஹாநாதாய நம : (கண சக. 140) பெருவாக்கு-அபரநாதத்துக்கும் மேலான பரநாதம்

7. ஓம் குண்டலிநே நம : [கண. சக. 88] பெருவாக்கு — வாக்குகளுககு முதற்காரணமாகிய சுத்தமாயை சுத்த மாயைத தொழிற்படுத்துபவர் கணபதி.

8. ஓம் ஸர்ப்ப யஜ்ஞோபவீதவதே நம : (கண-சக-237 கணபதி, தமது மார்பில் பூணூலாக அணியும் பாம்பு (சர்ப்பம்) குண்டலிநியை (சுத்தமாயையை) உணர்த்தி நிற்பது. ஓடுங்கிச் சுருண்டு கிடக்கும் பாம்பு [Coiled Serpent] விரிவது போல [Uncoiling] படைப்புக் காலத்தில் குண்டலிநி பல அண்டங்களாக, பல உலகுகளாக விரிகிறது; பாம்பு சுருண்டு ஓடுங்குவது போல், சர்வ சங்கார காலத்தில் சுத்தமாயை சத்தியில் ஓடுக்குகிறது. இக்காரணத்தால் சிவபெருமான், கணபதி ஆகியோர் தமது உடலில் அணியும் பாம்பு குண்டலநியை உணர்த்தி நிற்பது குண்டலிநியைத தொழிற்படுத்துவர் தாமே என்பதனை குறிப்பது அவர்கள் தங்கள் உடம்பில் அணியும் பாம்பு.

மேலும் பூணூல் ஞானத்தைக் குறிப்பது. கணேசர் அணியும் பூணூல் தம்மை வழிபடும் அன்பர்களுக்குத் தாமே ஞானத்தை கொடுப்பவர் என்பதனை உணர்த்தி நிற்பது.

9 ஓம் ஸர்ப்ப ஹார கடீ ஸூத்ராய நம : (கண-சக 236) குண்டலிநியாகிய நாகத்தைப் பூணூலாக வன்றி மாலையாகவும் அரைஞாணுகவும் அணிபவர் கணபதி.

10 ஓம் வாகீஸ்வரேஸ்வராய நம : (கண-சக-345) பெரு வாக்கு-இங்கு வேதம், மறை; அதனை உரைப்பவர் பிரம தேவர் அத்தேவரை ஆள்பவர் கணபதி.

(4) பீடும் பெருக்கும் ஆனைமுகத்தானைக் கை கூப்புவர் :-

1. ஓம் மஹா பலாய நம : (கண-சக-502) பீடு - வலிமை, பலம்; மிக்க வலிமையை உடையவராய் தம் அன்பர்க்கு வலிமையை அருள்பவர் கணபதி.

2. ஓம் மஹா வீராய நம: (கண - சக - 603) பீடு - வீரம்.

(5) உருவாக்கும் ஆனை முகத்தானைக் கை கூப்புவர் - ஓம் யோகாய நம: (கண - சக - 726) உருவாக்கும் — யோக நெறியில் நின்று தம்மை வழிபடும் அன்பர்க்குத் தமது உருவைத் தருபவர் கணபதி.

(6) ஆனை முகத்தானைக் கை கூப்புவர் - ஓம் கஜாநநாய நம: (விநாயகர் அஷ்டோத்தர சதம் 27; கண - சக – 17) கஜ ஆனனம் - ஆனைமுகம்

இத்திருப்பாடலில் வடமொழியில் உள்ள கணபதி சகஸ்ர (ஆயிர) நாமங்களில் 17 நாமங்கள் (மந்திரங்கள்) ஆறு தமிழ் மந்திரங்களில் சுருக்கமாக உணர்த்தப்படுவதைக் காணலாம். கணபதி பூசையில் பிள்ளையாரைக் குறிக்கும் வகையில் மஞ்சள் பொடியை பிடித்து வைத்து, அதில் கணபதியை மலர்கள் அல்லது அட்சதை கொண்டு 17 வடமொழி மந்திரங்களால் அர்ச்சிப்பர் இவ்வாறு 17 வடமொழி மந்திரங்களை ஆறு தமிழ்த் திருமறைகளால் அர்ச்சனை செய்து கணபதியைப் பூசிக்க இத்திருப்பாடல் சிறப்பாக அமைகிறது.

பா. 2. 1. வேட்கை வினை முடித்தல்—தனதுபத்தர்கள் விரும்பிச் செய்யும் காரியங்களுக்கு இடையூறு (விக்னம) வராது காத்தல்.

**ஓம் பக்தவிக்ன நாசாய நம: (விநா அட் -30)**

2. இன்பம் செய்தல்—பக்குவ உயிர்களுக்குப் பேரின்பத்தை அருளுதல்: பேரின்ப காரணனாக இருத்தல் - ஓம்சிவாய நம: (விநா - அட் - 22, கண. சக. 760)

3 கணபதி வேந்து - கணபதியாகிய அரசன், ஆள்பவன். ஓம் கணேஸ்வராய நம: (கண. சக. 1).

## 2. சிவமூல மந்திரம், சத்தி மந்திரங்கள்

பா. 3. [அ] [i] சங்கரன் சதாசிவன், பொங்கு அரவன், புண்ணியன், அனல் உருவன் ஆகிய ஐந்தும் சிவபெருமானை உணர்த்தும் சொற்கள்; திருவைந்தெழுத்தில் 'சி' என்ற எழுத்து (பதம்) சிவபெருமானை உணர்த்தும் [ii] பாதம்-இறைவனது திருவருள்; அவன் சத்தி, திருவைந்தெழுத்தில் 'வ' [iii] போற்றி வழிபடும் உயிர் 'ய' [iv] போற்றி போற்றி' என இருமுறை வருவனவற்றில், இரண்டாவது போற்றி 'நம.' எனவே இத்திருத்தாண்டகத்தில் முதல் மூன்று அடிகளில் போற்றி போற்றி என முடியும் வாக்குகள் ஐந்தும் ஓம் சிவாய நம: என்ற சிவமூல மந்திரம். இதனால் இத்திருத்தாண்டகத்தால் சிவமூல மந்திரம் ஐந்து முறை ஓதப் பெறுகிறது

(ஆ) மேலும் பாதம் இறைவனது திருவளாகிய சத்தியை உணர்த்தி நிற்பதால், இவ்வைந்தும் 'ஓம் உமாயை நம' : (லலி - சக. 633) ஓம் மஹாசக்த்யை நம : என்ற மந்திரங்களுமாம் (லலிதா சகஸ்ர நாமம் 109) எனவே இத் திருப்பாடலால் சத்தியும் ஏழு முறை துதிக்கப்படுவது புலனாகும். சங்கரனே நின்பாதம் போற்றி போற்றி - ஓம் சாங்கர்யை நம : (லலி. சக. 126) சங்கரன் பாதம்-சுகத்தைக் கொடுக்கும் சக்தி.

[2] சதாசிவனே நின்பாதம் போற்றி போற்றி - ஓம் சதாசிவ பதிவ்ரதாயை நம : (லலி. சக. 709); ஓம் மனோன் மன்யை நம : (லலி. சக 20 )

[3] புண்ணியனே நின்பாதம் போற்றி போற்றி - ஓம் புண்யா புண்ய பலப்பிரதாயை நம : (லலி. சக. 288) புண்ணியன் பாதம் புண்ணியங்களின் பலனைத் தரும் சத்தி.

[4] பொங்கரவா நின்பாதம் போற்றி — ஓம் குண்டலியை நம : (லலி. சக. 110) இறைவன் அணியும் அரவு குண்டலியாகிற சுத்தமாயை : அதனைத் தொழிற்படுத்துபவள் சத்தி.

[5] அயனும் மாலும் காணா அனலுருவா நின்பாதம் போற்றி போற்றி — ஓம் சிவலிங்கார்ச்சன பராயை நம : (சிவகாமி அஷ்டோத்தர சதம் 43). அயனும் மாலும் காணா அனல் உரு - சிவலிங்கம். இத் திருத்தாண்டகத்தால் சத்தி பல தமிழ் மந்திரங்களால் துதிக்கப்படுவது அறியப்படும்.

## 3. சுப்பிரமணிய மந்திரங்கள்

பா. 4. (1) மலைமகள் மதலை — ஓம் உமாஸுநவே நம: (சண்முக சகஸ்ர நாமம் 96, சுப்ரமண்யர் அஷ்டோத்தரம் 28)

[2] குமரவேள் - [i] ஓம் குமாராய நம : (சுப். அஷ் - 25 சண் -சகஸ். 154) குமரன் - குமாரன், மகன்.

(ii) ஓம் ரோக நாசாய நம: (சுப். அஷ். 83). கு- அறவெறுப்பு; அருவருக்கத்தக்க அறியாமை, ஆணவ மலம்; குமாரன் — அறியாமை (ஆணவ மலம்) ஆகிய நோயைப் போக்குபவன்.

3. வள்ளி மணாளன் — ஓம் வல்லீபதயே நம: (குமாரஸ்தவம்-21)

4 வேல் உலாம் தடக்கை வேந்தன் — ஓம் சக்தி தராயை நம: (சுப. அஷ். 11) சக்தி வேல், ஞானசக்தி.

5. சேந்தன்:- ஓம் தேஜோ நிதயே நம: (சுப். அஷ் 73) சேந்து — சிவப்பு: சேந்தன் — சிவப்பு நிறம் உடையவன், சோதிவடிவானவன்.

இத்திருவிசைப்பாவைப் பாடுவதால் ஆறுமுகப் பெருமான் திருநாமங்கள் ஆறு ஓதப்படுதல் புலனாகும்.

## 4. திருவிளக்கு மந்திரங்கள்

பா. 5. ஞானச் சுடர்விளக்காய் நின்றாய் நீயே:

(i) அஜ்ஞான த்வாந்த தீபிகாயை நம: (லலி: சக. 993) அறியாமையாகிற இருட்டைப் போக்கும் விளக்கு சக்தி,

(ii) ஓம் ஜ்ஞான தாயை நம: (லலி. சக. 643) ஞானத்தை அளிபபவள் விளக்கு வடிவில் உள்ள சக்தி.

(iii) ஓம் ஜ்ஞான விக்ரஹாயை நம: (லலி. சக. 644) ஞானமே வடிவான சக்தியையே நாம் விளக்கில் வழிபடுகிறோம்.

(iv) ஓம் விஜ்ஞாத்ர்யை நம: (லலி. சக. 651) விசேஷமான அறிவை உடைய சக்திக்கு வணக்கம்.

(v) ஓம் விஜ்ஞான கன ரூபிண்யை நம: (லலி சக. 2 3) சமஷ்டி ஞான வடிவான விளக்குக்கு வணக்கம்.

(vi) ஓம் பரஜ்ஞான கன ரூபிண்யை நம: (லலி. சக 574( நித்தியமான ஞானமே வடிவாகக் கொண்டவளுக்கு வணக்கம்.

எனவே 'ஞானச்சுடர் விளக்காய் நின்றாய் நீயே' என்ற அப்பர் அருள் வாக்கு திருவிளக்கை இறைவனது ஞான வடிவாகப் பாவித்து வணங்குதற்குரிய பல வடமொழி மந்திரகளின் நேர் ஒத்ததமிழ் மறையாதல் அறியப்படும்.

## 5. ஐந்து கலா மந்திரங்கள

பா. 6. இதில் முதல் ஐந்து வரிகள் முறையே 1. ஓம் நிவர்த்தி கலாயை நம: 2, ஓம் ப்ரதிஷ்டாகலாயை நம: 3. ஓம் வித்யா கலாயை நம: 4. ஓம் சாந்தி கலாயை நம: 5. ஓம் சாந்தியதீத கலாயை நம: என்ற ஐந்து கலா மந்திரங்களாம். இம் மந்திரங்களால் திருநீறு சுத்தி செய்யப் படும்.

## 6. திருநீறு

பா. 7. 'வெந்துயர் தீர்ப்பது நீறு' : துன்பங்களுக்குக் காரண மான தீவினைகளைச் சுட்டு நீறு ஆக்குவதால் திருநீறு 'பஸ்மம்' எனப் பெயர் பெற்றது. திருநீறு பராசத்தி வடிவாக இருப்ப தால் ['பராவணமாவது நீறு — ஞான சம்பந்தர்] கன்ம மல நீக்கம் செய்ய வல்லது.

புன்மை தவிர்ப்பது நீறு : புன்மை — சிறுமை; உயிர்களது வியாபக அறிவை மறைத்துச் சிறுமைப்படுத்தும் ஆணவ மலம்; திருநீறு ஆணவ மலத்தைக் கழுவதலால் க்ஷாரம் எனப்படும்

பா. 8. திருநீற்றினை நெற்றியில் அணியும் போது ஓம் சிவாய நம' என்ற மூல மந்திரத்தை ஓதுதல் வேண்டும் என்ற விதியை அப்பர் அடிகள் இத்திருவிருத்தத்தில் நமக்கு உணர்த் தியருளுகின்றார்.

## 7. சந்திர (கும்ப) மந்திரம்

பா. 9. அடியார்கட் காரமுதம் ஆனாய் போற்றி — ஓம் அம்ருத் தேச்வராய நம: என்ற மந்திரம். சந்திர கும்பத்தில் அம்ருத் தேச்வர மூர்த்தியை ஆவானம் செய்து பூசிப்பர்.
மதி — சந்திரவடிவு கொண்ட அமிர்தேச்வர மூர்த்தி.

## 8. சூரிய மந்திரங்கள்

பா. 10. 1. நண்ணல் அரியாய் போற்றி — ஓம் ரவயே நம: 'ரவ' பன்னிரண்டு சூரியர்களில் ஒருவன். ரவ [வடசொல்] = மலை. மலையின் உச்சி போன்று நண்ணுதற்கரிதாய் இருப்பவன் ரவி [சூரியன்].

2. வான் மேல் இருந்தாய் போற்றி — ஓம் **ஆதித்தாய நம:** ஆதித்தர் — வானோர்; ஆதித்தன் — 12 சூரியர்களில் மற்றொருவன்.

3. நாற்றிசைக்கும் விளக்காய நாதா போற்றி — [i] ஓம் **லோக ப்ரகாசாய நம:** விளக்கு — உலகின் மேல் வீசும் சூரிய ஒளி; உலகப் பிரகாசன் என்பவன் 12 சூரியர்களில் மற்றொருவன்.

[i] ஓம் **திவாகராய நம:** திவா - பகல்; கரன் - செய்பவன் தனது ஒளியால் பகல் இரவுகளைச் செய்யும் மற்றொரு சூரியன் திவாகரன் என்போன்.

4. நான்முகற்கும் மாற்கும் அரியாய் போற்றி — ஓம் **பாஸ்கராய நம:** பாஸ்கரன் - தீ. அயனும் மாலும் அறியாத வண்ணம் ஒரு மாபெரும் தீப்பிழம்பாய் நின்றவன் இறைவன்; சூரியனை ஒரு தூல திருமேனியாகக் கொண்ட சிவன்.

சந்திர கும்பத்தைச் சுற்றிலும் அமைக்கப்பட்ட 12 மூலைப் பாலிகைகளில் 12 சூரியர்களை வணங்கி நீர் தெளிக்கப்பெறும். 12 சூரியர்களில் ஐவர் இத்திருத்தாண்டகத்தால் போற்றப் படுதல் புலனாகும்.

## 9. தத்துவ மந்திரங்கள் :

பா. 11. [ ] பொய்ச்சார் புரம் மூன்றும் எய்தாய் போற்றி - ஓம் **ஆத்மதத்வாய நம:** பொன், வெள்ளி, இரும்பு ஆகிய மூன்று உலோகங்களால் ஆனவை இறைவன் எரித்த முப்புரங்கள் [கோட்டைகள்]. மண் தத்துவத்தை உணர்த்தி நிற்க, மண் முதலாக உள்ள 24 ஆன்ம தத்துவங்களைத் தூலவடிவாகக் கொண்ட இறைவனை அப்பர் சுவாமிகள் இங்கு துதிக்கிறார்.

[ii] என் சிந்தை புகுந்தாய் போற்றி - ஓம் **வித்யா தத்வாய நம:** சிந்தை - சிந்தித்துப் போகத்தை நுகரும் தன்மை யுடைய புருடன் என்ற தத்துவம். இது வித்தியா தத்துவங்கள் ஏழில் ஒன்று.

[iii] கச்சாக நாகம் அசைத்தாய் போற்றி - ஓம் சிவ தத்வாய நம: நாகம் - சுத்த மாயை ; சிவ தத்துவம்.

இம்மூன்று தத்துவ மந்திரங்களான் காப்பு நாண் சுத்தி செய்யப்பெறும்.

## 10. கவச மந்திரம்

பா 12. சங்கு கொத்த நீற்றெம் சதுரா போற்றி-ஓம் கவசாய நம: திருநீறு - கவசம்; போர்க்கவசம் போன்று உயிர்களுக்கு ஊறு வராது காப்பது. 'கங்காளன் பூசும் கவசத் திருநீறு' - திருமூலர் திருமந்திரம், (பா-1666), 'ஆன நீற்றுக் கவசம் அடையப் புகுமின்கள்' - (திருவாசகம், திருப்படையாட்சி, பா 1).

சாவாமே காத்தென்னை ஆண்டாய் போற்றி - இதுவும் ஓம் கவசாய நம : என்ற கவச மந்திரம்.

இக்கவச மந்திரத்தை ஓதிக் காப்பு நாண் மணமகனது வலது கையிலும், மணப்பெண்ணினது இடது கையிலும் கட்டப் பெறும்.

பா. 13 இத்திருப்பாடலில் சேக்கிழார் சுவாமிகள் மணமக்கள் கையில் அணியும் காப்பு நாண் பிறவிக்குக் காரணமாக உள்ள இருவினைகளின் (நல்வினை தீவினைகளின்) தொடக்கினை அறுப்பது என்றருளிச் செய்கிறார் ஆதலின் மணமக்களைத் தீங்குறாது காப்பது மந்திரித்துச் சாத்தப் பெற்ற காப்பு நாண் என்ற குறிப்பும் இதிற் காணலாகும்.

## 11 சிவ மூல மந்திரம்

பா. 14. i. வள்ளல், நின், நின் ஆகிய மூன்றும் திருவைந் தெழுத்தில் 'சி'. ii. பாதம், கருணை, வெள்ளம் ஆகிய மூன்றும் 'வ'. iii. போற்றி என வணங்குவது. 'ய'

எனவே ஓம் *சிவாய நம:* என்ற மூல மந்திரம் இத்திருவாசகத்தால் மும்முறை ஓதப்பெறுதல் புலப்படும். திருமணத்தைச் செய்விக்கும் தேசிகர் சிவமூல மந்திரத்தை ஓதி மணமக்களுக்கு ஆடை, மாலை முதலியன அளித்தல் வேண்டும். என வீர தந்திரம் கூறும் (அகோர சிவாசாரியர் சைவ ஷோடகப் பிரகாசிகை)

## 12. ஐந்து பிரம மந்திரங்கள்

**பா. 15.** (i) ஆகாய வண்ணம் உடையாய் போற்றி - ஓம் ஈசான மூர்த்தநே நம ஈசானர் ஆகாய மண்டல (சாந்தியதீத கலாச்சக்கர) அதிபதியாவர்.

(ii) செய்யாய் போற்றி - ஓம் **தத் புருஷைய நம:** சதாசிவ மூர்த்தியின் ஐந்து திருமுகங்களில் தத்புருஷமுகம் சிவப்பு நிறம் உடையது.

(iii) கரியாய் போற்றி ஓம் **அகோராய நம:** அகோர முகம் கரு நிறங்கொண்டது.

(iv) தணியாய் போற்றி - ஓம் **வாமதேவாய நம:** குளிர்ந்து இருப்பது நீர்; நீர் மண்டல அதிபதி திருமால்; காத்தற் கடவுள்; காத்தல் தொழிலைச் செய்வது சதாசிவ மூர்த்தியின் வாமதேவ முகம்.

(v) வெளியாய் போற்றி - ஓம் **சத்யோ ஜாதாயா நம:** சத்தியோ ஜாத முகம் வெண்மை நிறம் :

இத்திருத்தாண்டகத்தால் ஐந்து பிரம மந்திரங்களும் ஓதப் பெறுதல் புலனாகும். (இம் மந்திரங்கள் பற்றி பா - 21-ன் கீழ் உள்ள குறிப்புகளைக் காண்க).

## திருநீறு-கவசம் (6)

பா. 17. திருநீறு பராசத்தியின் வடிவாக இருப்பது ஆதலின் ஆசிரியர் திருநீற்றினை அளிக்கும்போது மணமகன் அதில் இறைவனது திருவருட் சத்தி பதிந்திருக்கிறதாகப் பாவித்து அதனைப்பணிவுடன் பெற்று திருவைந்தெழுந்து ஓதி நெற்றியில் இடுதல் வேண்டும்.

தரா - பூமி; நில உலகு; மண் தத்துவத்தை உணர்த்தி நிற்பது சைவர்கள் கொள்ளும் 36 தத்துவங்களும் இறைவனது தூலத் திருமேனி.

அரா - குண்டலியாகிற பாம்பு, சுத்த மாயை; சுத்த மாயைத் தொழிற்படுத்துபவள் சத்தி.

## சந்திர(கும்ப)மந்திரம் (7)

பா. 18. அடியார்க் கமுதெலாம் ஈவாய் போற்றி - ஓம் அம்ருத்தேச்வராய நம: அமிர்தம் - இனிப்பு, இன்பம், பேரின்பம். சிவபெருமானே உயிர்களுக்குப் பேரின்பத்தை அருள வல்லவன். சந்திர கும்பத்தில் சந்திரனைத் தூல வடிவாகக் கொண்ட சிவபெருமான் வணங்கப் பெறுவர்.

## சூரிய மந்திரங்கள் (8)

பா. 19. ஒள் எரி வீசும் பிரானே போற்றி - [i] ஓம் லோகப் ப்ரகாசாய நம: ஒள் எரி வீசுதல் - சுடர் ஒளி வீசுதல், பிரகாசித்தல்.

[ii] ஓம் பாஸ்கராய நம: எரி - தீ; பாஸ்கரன்.

[iii] ஓம் சூர்யாய நம: எரி - தீப் பிழம்பு; சூரியன் ஒரு தீப்பிழம்பாக உள்ளவன்.

[iv] ஓம் திவாகராய நம: எரி வீசும் சூரியன் பகலையும் இரவையும் செய்பவன்.

இந்த ஒரு தமிழ் மறையால் 12 சூரியர்களில் நால்வரது வடமொழி மந்திரங்கள் ஓதப் பெறுதல் அறியப்படும்.

## தத்துவ மந்திரங்கள் (9)

பா. 20. எண்ணும் எழுத்தும் சொல் ஆனாய் போற்றி - 'ஓம் சிவதத்வாய நம: எழுத்து, சொல் ஆகிய இரண்டுக்கும் முதற்காரணமாக இருப்பது சுத்தமாயை; சிவ தத்துவம். எண்ணும் - எண்ணப் பெறுகின்ற, கருதப்படும்.

என் சிந்தை நீங்கா இறைவா போற்றி-ஓம் வித்யாதத்வாய நம: சிந்தை — புருட தத்துவம் [பா - 11 உரை பார்க்க].

விண்ணும் நிலனும் தீ ஆனாய் போற்றி-ஓம் ஆத்ம தத்வாய நம விண், காற்று, தீ, நீர், மண் [நிலன்] ஆகியவை ஆன்ம தத்துவங்கள் 24-ல் ஐந்து.

இம்மூன்று தமிழ் மறைகளாலும் காப்பு நாண் தூயதாக்கப் பெறும்.

## கவச மந்திரம் (10)

பா.. 21. சாம்பர் அகலத்து அணிந்தாய் போற்றி ஓம் கவசாய நம: சாம்பர் — திருநீறு; கவசமாக நின்று காப்பது; அகலம்— மார்பு.

இறைவன் கவசமாகத் திருநீற்றினைத் தன் மார்பில் அணிவது தன்னைக் காக்கும் பொருட்டன்று; அவனது பராசத்தியாகிய திருநீறு நம்மைத் காப்பது என்பதனை நமக்கு அறிவுறுத்தற் பொருட்டாம்.

தவநெறிகள் சாதித்து நிற்றல் — தவநெறியில் நிற்கும் தன் அன்பர்கள் அணியும் திருநீறில் பராசத்தியாக நின்று அவர்களுக்குத் தீங்கு வராது காத்து, அவர்கள் மேற்கொண்ட தவத்தினைச் சாதிக்க உதவுதல். தவம் — சரியை, கிரியை யோகம், ஞானம் ஆகிய நான்கு சைவ நெறிகள்.

## சிவமூல மந்திரம் (11)

பா. 22 மெய்ஞ்ஞான மூர்த்தியார் — திருஞானசம்பந்த மூர்த்திகள்; கற்பகப் பூங்கொம்பன்னாள் - ஞானசம்பந்தப் பெருமானைத் திருமணம் செய்யும் பேறு பெற்ற நம்பாண்டார் நம்பி திருமகளார்.

## சிவமூல மந்திரம் (11)

(அ) பா. 23. (i) என் பொய்மை ஆட்கொண்டருளும் பெருமை போற்றி;

(ii) வானோர்க் கமுதம் ஈ வள்ளல் போற்றி;

(iii) ஆர்ந்த நின் பாதம் தாயேற் கருளிட வேண்டும் போற்றி;

இம்மூன்று தமிழ் மந்திரங்களும் 'ஓம் சிவாய நம' என்ற மூல மந்திரமாம்.

(ஆ) (i) பெருமை, வள்ளல், நின் — 'சி' பெருமை (பெருமையுடையசிவன்)

(ii) ஆட்கொண்டு அருள்வது. அமிர்தம், அருள்வது —இறைவன் திருவருளாகிய 'வ' (அமிர்தம் — பேரின்ப வடிவாகியசக்தி.)

(iii) என், வானோர் நாயேன் – 'ய'; போற்றி — நம; இத்திருவாசகத்தால் சிவமூலமந்திரம் மும்முறை ஓதப் பெறுகிறது

## ஐந்து பிரம மந்திரங்கள் (12)

பா. 24. ( ) கொல்லார் மழுவாட் படையாய் போற்றி – ஓம் ஈசான மூர்த்தயே நம: மழு—பரசு; இறைவன் தனது மேல் நோக்கிய வலது திருக்கரத்தில் தாங்கி இருக்கும் ஆயுதம். இது சர்வ சங்கார காலத்தில் எல்லா உலகுகளையும் உயிர்களையும் ஒடுக்கும் பரா சத்தியை உணர்த்தி நிற்பது பராசத்தியின் ஒரு கூறே ஈசானம்.

(ii) கல்லாதார் காட்சிக்கரியாய் போற்றி — ஓம் தத்புருஷாய நம: கல்லாதார் — வேதாமங்களைக் கற்று அவை கூறும் நெறிகளில் நில்லாதார் இறைவன் இவர்களோடு ஒன்றுய்க் கலந்து உடனாகி நின்றும் இவர்கள் அவனை அறியார்; இவர்களை இவ்வாறு காணாதவாறு செய்வது மறைப்புச் சத்தி இதன் ஒரு கூறு தத்புருஷம்.

(iii) கற்றார் இடும்பை களைவாய் போற்றி — ஓம் அகோராய நம: வேதாகமங்களை நன்கு கற்று அவை காட்டும் நெறியில் நிற்பார்க்கு இறைவன் திருவருள் துணை நின்று அவர்களது ஆணவ மலத்தை நாளடைவில் மெலிவடையச் செய்யும். இவ்வாறு மலம் மெலிவடைதல் மலபரிபாகம் எனப்படும்.

இம்மலபரிபாகம் செய்யும் சத்தி அகோரம். கோரம் —அச்சம்; அஞ்ச வேண்டிய ஆணவ மலம்; அதனைப் பரிபாகம் செய்யும் சத்தி அகோரம்

(iv) வில்லால் வியன் அரணம் எய்தாய் போற்றி — ஓம் வாம தேவாய நம: மக்களைத் துன்புறுத்தி வந்த அரக்கரது கோட்டைகள் மூன்றையும் அழித்தது காத்தற் பொருட்டு. காத்தல்; தொழிலைச் செய்யும் சத்தி வாமதேவம்.

(v) கொல்லும் கூற்று ஒன்று உதைத்தாய் போற்றி — ஓம் சத்யோஜாதாய நம: மார்க்கண்டேயன் உயிரை வவ்வ வந்த காலனை உதைத்தது காலால். சதாசிவ மூர்த்தியின் மந்திரத் திருமேனியில் கால் (பாதம்) சத்யோஜாத மந்திரம்

எரி சுடராய் நிற்பது — வேள்வித் தீயில் இந்த 5 பிரமமந்திர மூர்த்திகளாய் நின்றது அருள் பாலிப்பது.

எல்லாம் சிவன் என நிற்றல் — திருமணத்தில் செய்யப்படும் வேள்வித் தீயிலும் சிவன் எழுந்தருளி நின்று வழிபாட்டை ஏற்றுக் கொள்ளுதல்.

இத்திருத்தாண்டகத்தை ஓதுவதால் வேள்வித் தீயில் சதாசிவமூர்த்தி பாவிக்கப் பெற்று ஐந்து பிரம மந்திரங்களாலும் அர்ச்சிக்கப்படுவது காணலாம்

1. ஐந்து பிரமமந்திரங்கள் உணர்த்தும் தொழில்கள் 2. அத்தொழில்களின் அதிபதிகள் (காரணேச்வரர்கள்), 3. அவ்வதிபதிகளது அதிகார எல்லையில் உள்ள கலைகள் 4 மண்டலங்கள், 5. அவர்கள் எந்த சத்தியின் கூறாக உள்ளவர்கள் என்பது, 6. அவர்கள் சதாசிவமூர்த்தியின் வடிவில் எந்தெந்த உறுப்பாக உள்ளார்கள் என்பது, ஆகிய ஆறையும் பின்வரும் அட்டவணையிற் காண்க.

| | ஈசானம் | தற்புருடம் | அகோரம் | வாமதேவம் | சத்யோஜாதம் |
|---|---|---|---|---|---|
| 1 | அருளல் | மறைத்தல் | ஒடுக்குதல் | காத்தல் | படைத்தல் |
| 2. | சதாசிவன் | மகேசன் | உருத்திரன் | மால் | அயன் |
| 3. | சாந்தியதீதை | சாந்தி | வித்தை | பிரதிட்டை | நிவர்த்தி |
| 4. | விண் | காற்று | தீ | நீர் | மண் |
| 5. | பராசத்தி | ஆதிசத்தி | இச்சாசத்தி | ஞானசத்தி | கிரியாசத்தி |
| 6. | சிரசு | முகம் | மார்பு | குய்யம் | பாதம் |

# 13 ஆறு அங்க மந்திரங்கள்

பா. 25 (i) முல்லையம் கண்ணி முடியாய் போற்றி — ஓம் சிரசே நம: கண்ணி — சிரசில் அணியப்படும் சிறு பூ மாலை; சிரசு — பராசத்தி.

(அ) 'விண்ணில் பரை சிரம்'' என்பர் திருமூலர் (திருமந்திரம் பா - 1744) பராசத்தி எவ்லாச் சத்திகளிலும் தலையாயது; மேன்மையுடையது. ''சர்வோன்னதமாய் இருக்கும் தர்மம் சிரசு'' என்று பௌஷ்கர திராவிட பீடிகை கூறுகிறது. தர்மம் — இங்கு குணம்; சத்திகள் பலவும் இறைவனது பல வகையான குணங்கள்.

(ஆ) பராசத்தியே ஆதி சத்தியாய் (திரோதான சத்தியாய்) நின்று, இச்சா ஞானக்கிரியா சத்திகளாக விரிந்து ஐந்தொழில் களையும் செய்வது. ''சுங்கிவர் பாக்கியம் எட்டும் சிரமாம்'' என்னும் சீகாழிச் சட்டைநாதர் எழுதிய சதாசிவ ரூபம். (பா-130) இதன் பழைய உரை ''பரமசிவனது கிரணமான இச்சா ஞானக் கிரியைகள் மூன்றும்...... ஈசனுதி ஐந்தும் ஆகிய எட்டுக் குணமும் ஐஸ்வரியமாக உடைத்து ஆகை யாலும் சிரசு'' என்று விளக்கம் கூறும் பாக்கியம் — செல்வம், ஐஸ்வரியம்.

(ii) முடியாய் போற்றி — ஓம் சிவாய நம: சிகை - மயிர்முடி; குடுமி. இறைவன் திருமேனியின் சிகை ஆதிசத்தி.

(அ) ''மிக்க சிகை ஆதி'' என்பர் திருமூலர் (திருமந்திரம் பா. 1744).

(ஆ) சிகை இறைவனது திருமேனியில் உட்கருவிகள் (அந்தக் கரணங்கள்.

''அநாதியிலே தனக்குச் சுவதந்திரமாய் உள்ள சிவகரணம் மேலான சிகை'' என்னும் சதாசிவ உரை. உட்கரணங்கள் நினைந்த மாத்திரத்தில் (சங்கற்பத்தால்) ஐந்தொழில்களையும் செய்யும் சத்திகள்

(iii) தில்லைச் சிற்றம்பலம் மேயாய் போற்றி - ஓம் ஹ்ருதயாய நம

(அ) சிறு + அம்பலம் - சிற்றம்பலம், சிறுமை - நுண்மை ; அம் பலம் - சபை. நுண்ணிய பரஞான வெளியே இறைவன் திருக் திருக்கூத்து நவிற்றும் சபை. 'சிற்பர வியோமமாகும

சிற்றம்பலம்' என்பர் சேக்கிழார் சுவாமிகள். சிதம்பரம் (தில்லைச் சிற்றம்பலம்) அண்டத்தில் உள்ள பரஞான வெளியைக் குறிப்பது. இதுவன்றி ஒவ்வொருவர் இதயத்திலும் இப்பரஞானவெளி உண்டு. "எது இதயத்துள் ஆகாசமாய் (திருச்சிற்றம்பலமாய்) இருக்கின்றதோ அதில் அனைத்தையும் வசீகரிப்பவரும், அனைத்துக்கும் அதிபதியும், ஈசானரும் ஆயினோர் அமர்கின்றார்" என்று பிருகதாரணிய உபநிடதம் கூறும். "இந்த பிரம புரத்திலே (சரீரத்திலே) தகர (நுண்ணிய) புண்டரீக (இதய கமல) வீடு (இருப்பிடம்) உள்ளது; 'இந்தத் தகர புண்டரீக வீட்டினுள்ளே தகராலயம் (திருச்சிற்றம்பலம்) உள்ளது; இந்தத் தகராலயத்துள்ளே உள்ளது (தாண்டவ மூர்த்தி) தேடற்பாற்று; அறியற்பாற்று" என்று சாந்தோக்கிய உபநிடதம் கூறும் (செந்திநாதய்யர் எழுதிய) 'சைவ வேதாந்தம்' என்னும் நூல்)

(ஆ) ஞானக்கிரியை நெறியில் நிற்போர் இந்த இதயகமலத்தில் ஆன்மலிங்கத்தைப் பாவித்து அதில் சதாசிவ மூர்த்தியைத் (தாண்டவேச்வரரை) வழிபாடு செய்வர் "நல்லோர் உணர்வரு ஞானமது இதயம்' என்பர் சீகாழிச் சட்டைநாதர். (சதாசிவ ரூபம் பா - 130). நல்லோர் - ஞான நெறியில் நிற்போர் - உணர்வரு ஞானம் - உணர வருகின்ற ஞானசத்தி

(இ) 'சதாசிவருக்கு இதய மந்திரம் ஞானம் என்று சொல்லப்படும்'' என்னும் பௌஷ்கட பீடிகை

(iv) முழுநீறு பூசிய மூர்த்தீ போற்றி — ஓம் கவசாய நம: நீறு-கவசம், கவச மந்திரம் இறைவனது இச்சா சக்தி.

(அ) "வண்ணக்கவசம் வனமுடை இச்சை" என்பது திருமூல நாயனார் திருவாக்கு (திருமந்திரம் 1`4). இன்புறும் உயிர்களை காக்க வேண்டும் என்றும் இறைவனது கருணையே அவன் இச்சா சக்தி.

(ஆ) "தன்னையும் தானே ரட்சித்துக்கொண்டு அன்னியரையும் ரட்சிக்கிற சக்தி கவசம்" எனபர் சிவாக்கிர யோகிகள் (சிவஞான சித்தியார் முதற் சூத்திரம், பா, 59. உரை)

(இ) "கவசமாவது ரட்சை" என்னும் பௌஷ்கர பீடிகை.

(v) எல்லை நிறைந்த குணத்தாய் போற்றி — ஓம் நேத்ரப்யோ நமः எல்லை நிறைந்த குணம் - வியாபக அறிவும் அளவிலா ஆற்றலும் கொண்டு ஐந்தொழில்களைச் செய்யும் சத்தி, கிரியா சத்தி, இது இறைவன் நேத்திரம்.

(அ) 'பண்ணும் கிரியை பர நேத்திரத்திலே'' (திருமந்திரம் 1744).

(ஆ) பரமனது இச்சா ஞானக் கிரியைகளால் சர்வ காரியங்களையும் அதிட்டித்து அறிந்து செய்யும் தொழில்களாகி நின்ற குணத்தின் உரிமையான இயல்பு நேத்திரம்'' என்பது சதாசிவ ரூப உரை.

(vi) சென்றடைந்தோர் தீவினைகள் தீர்ப்பாய் போற்றி — ஓம் அஸ்த்ராய நம: அஸ்திரம் - ஆயுதம், கைவிடுபடை. இறைவன் தன்னை அடைந்தவர்கள் தீயராயினும் அவர்களது தீவினைகளைப் போக்குபவன் என்பதனை உணர்த்துவது அவனது கோபத் திருமேனியில் (வேக வடிவில்) கொண்ட ஆயுதங்கள். இறைவன் கோபங்கொண்டவன் போல் ஆயுதங்களைத் தாங்கி நிற்பது தன்னை அடைந்தார் தீவினைகள் மேலும் மேலும் வளராமல் அவற்றை ஒழித்தற் பொருட்டு

(அ) தீவினைகள் அறியாமையால் செய்யப்படுவன அறியாமையைப் போக்குவது அஸ்திரம் '' பத்தருடைய அஞ்ஞானங்களை ஹரிக்கிற பிரதாப சத்தியே அஸ்திரம்'' என்பர் சிவாக்கிர யோகிகள். (சித்தியார் 1 – 59 உரை)

(ஆ) '' ஆன்மாக்களது அநாதி மலத்தைச் சங்கரிக்கும் பெருமை அஸ்திரம்'' என்னும் சதாசிவ ரூப உரை. அநாதி மலம் - ஆணவ மலம்; இம்மலமே அறியாமைக்குக் காரணமாவது. பெருமை — வீரம்

(இ) 'அஸ்திரம் - பிரதாபம்' என்னும் பௌஷ்கர பீடிகை. பிரதாபம் - வீரம்; கொடிய ஆணவ மலத்தைப் போக்கும்வீரம். முருகப்பிரான் திருக்கைவேல் சூரபன்மனது ஆணவத்தைப் போக்கியது கந்தபுராணத்தால் அறியப்படும்.

இந்த ஆறு மந்திரங்களும் இறைவன் திருமேனியாகிற சத்தியினது மந்திரங்கள். இவற்றுள் சிரசு, சிகை, இருதயம் மூன்றும் அங்கங்கள்; நேத்திரம் பிரத்தியங்கம்; கவசமும், (சூலம் மழு, பாசம், அங்குசம், பாம்பு, போன்ற) ஆயுதங்களும் சாங்கம் (சிவாக்கிரர் சித்தியார் - 1. 4). அங்கம், பிரத்தியங்கம் சாங்கம் ஆகியவை இறைவன் திருவருள் (சித்தியார் - 1 4). அங்க மந்திரங்களால் இறைவனது பல சத்திகளை (பலவகைப்பட்ட அருட்குணங்களை) நாம போற்றுகின்றோம். இறைவனது திருவருட் சத்தி ஒன்றுதான்; பல வகைத்தொழில் வேறுபாடுகளால் அச்சத்தி பலவாறு (பலவேறு நாமங்களால்) போற்றப்படுகிறது.

பா – 26. மணமக்களின் பெற்ருேர் தாரை வார்த்துப் பெண்ணைக் கொடுக்கு முன், மணமக்கள் ஊசல் (ஊஞ்சல்) ஆடுதலை வடமொழிக் கந்தபுராணம் மட்டும் கூறுகிறது. திருமண நிகழ்ச்சிகளை எடுத்துக் காட்டும் பெரியபுராணம், கந்தபுராணம், பேரூர்ப் புராணம், தணிகைப் ஆகிய தமிழ்ப் புராணங்கள் ஊசல் ஆடுதலைக் குறிப்பிடுவதில்லை.

## 14. இறைவன் திருமணக்கோலம்

பா. 26. இறைவன் உமையம்மை (அஞ்சொலாள்) தன்னேடும் கூடி இருப்பது (i) உயிர்களது பிறப்பு (துஞ்சல்) இறப்புகளை அறுத்தற் பொருட்டு (ii) அடியார் நெஞ்சுளே அமுது ஊறுதற் பொருட்டு. நெஞ்சில் அமுதூறல் - அடியவர்கள் தியான வழி பாட்டில் அவர்களோடு இரண்டறக் கலந்து நின்று அவர்களுக்குப் பேரானந்தத்தை (சிவயோகத்தை) அருளிச் செய்தல் இறைவன் திருமணக்கோலம் அவன் உயிர்களுக்குச் சிற்றின்பத்தையும் பேரின்பத்தையும் அருள்பவன் என்பதனை உணர்த்தி நிற்பது.

பா. 27 (i) ஒருவனே (சி) எங்கள் கோமளக் கொழுந்து ! (வ) ! வருக என்று என்னை (ய) வாங்கிட வேண்டும் போற்றி— ஓம் சிவாய நம:

(ii) ஒப்பில் அப்பனே (சி)! தருக நின் பாதம் (வ) போற்றி — ஓம் சிவாய நம:

இத்திருவாசகத்தால் சிவமூல மந்திரம் இருமுறை ஓதப் பெறுகிறது.

தேசிகர் மணமக்களுக்கு மாலை வழங்கும் போது துதிக்கும் மந்திரம் திருவைந்தெழுத்து என வீர தந்திரம் கூறும். திருவைந்தெழுத்து சிவன திருநாமம். சிவனே சகல மங்கலங்களையும் அருள்பவன் சிவன் என்ற சொல்லுக்கு மங்கலம், சுகம் இன்பம் என்பது பொருள் மணமகள் மணமகனுக்கு மாலை இடும்போது இம்மந்திரத்தை ஓதி இடுதல் சகல மங்கலங்களைத் தரும்.

## 15, இறைவன் திருவடி

பா. 28 (அ) சைவ நூல்களில் இறைவன் திருவடி (திருவருள்) இருவகையாகப் போற்றப்பெறும். (i) திருவடி மலத்தாற் கட்டுண்டை (பெத்த) ஆன்மாக்களது மலங்களைப் பரிபாகம்

செய்து அவற்றை நீக்குவது. அப்போது திருவடி ஞானசத்தி கிரியாசத்தி ஆகிய இரு சத்திகளாய் (மறைப்புச் சத்தியின் இரு கூறுகளாய்) நின்று உயிர்களை உய்விப்பது.

(ii) திருவடி மலப்பற்று நீங்கிய ஆன்மாக்களுக்கு (சுத்த ஆன்மாக்களுக்கு) சிவானந்தானுபூதியாக நின்று பேரானந்தத்தை விளைத்து நிற்பது. மருந்தாகிப் பிணி தீர்க்க வல்ல அடி — ஞான சத்தி கிரியா சத்திகளாக நின்று பாச நீக்கம் செய்யும் இறைவன் திருவருள். அடியார்கட்கு ஆரமுதம் ஆன அடி — சிவானந்தானு பூதி அருளும் திருவருட் சத்தி.

பா. 29 சிறந்தவர்க்குத் தேனுப் விளைக்கும் அடி—முத்த உயிர்களுக்குப் பேரானந்தத்தை அருளும் திருவருட் சத்தி. ஒன்றோடு ஒன்று ஒவ்வா உரு இரண்டு ஒன்றுக்கொன்று மாறுபாடுடைய இரு திருமேனிகளாகிய இருவகைச் சத்திகள் இவற்றுள் ஒன்று பேரானந்தத்தை அருளும் திருவருட் சத்தி; இறைவனைக் காட்டி அவனோடு சேர்த்தும் (இரண்டறக் கலக்கும்படி செய்யும்) பராசத்தி. மற்றொன்று அதற்கு நேர் மாறுபாடுடையதாக இறைவனை மறைக்கும் பாசங்களைத் தொழிற்படுத்தி நிற்கும் திரோதான சத்தி. இவ்விரு சத்திகளைக் கொண்டே இறைவன் உயிர்களுக்குப் பாசநீக்கத்தையும் சிவப்பேற்றையும் (பேரின்ப முத்தியையும்) அருள்கின்றான்.

15. (அ) திருவடி-ஆரமுதம், தேன் சிவானந்தானுபூதியை (பேரின்ப அனுபவத்தை) அருளும் திருவடி.

28. 29 (i) ஓம் ஸுதாஸாராபி — வர்ஷிண்யை நம :- (லலி சக 106) ஸுதா என்னும் அமுதத்தைச் சகஸ்ராரத்திலிருந்து உடலில் எங்கும் பெருகும்படி செய்பவர்க்கு வணக்கம்.

"வாக்கிறந்தமுதம் மயிர்க்கால் தோறும் தேக்கிடச் செய்தனன்" ' இன்தேன் பாய்ச்சி நிரம்பிய அற்புதமான அமுத தாரைகள் ஏற்புத் துளைதொறும் ஏற்றினன்'' என்ற மணிவாசகப் பெருமானது அனுபவமும் காண்க.

(ii) ஓம் சாங்கர்யை நம : (லலி. கச. 12) சம்-சுகம், சங்கரி— சுகத்தைச் செய்பவள், பேரின்பத்தை அருள்பவள்.

(iii) ஓம் சிவ சங்கரியை நம :(சிவகாம சுந்தரி அஷ்டோத்திர சதம் — 3)

(iv) ஓம் சர்வ மங்கலாயை நம : (லலி. சக 200) மங்கலம் — சிவம்-பேரின்பம். பராசக்தி பேரின்ப வடிவினளாக இருந்து பேரின்பத்தைப் பக்குவ ஆன்மாக்களுக்கு அருள்பவள்.

(v) ஓம் சிவாய நம : (லலி. சக. 53) சிவன்—பேரின்ப காரணன் (சிவஞான முனிவர்)

(vi) ஓம் மூல மந்திராத் மிகாயை நம : (லலி. சக 88) 'அண்ணிக்கும் அஞ்செழுத்'தாகிய 'நாம'த்தின் (சிவமூல மந்திரத்தின்) உட்பொருளாயவன்.

(vii) ஓம் பரமாநந்தாயை நம : (லலி. சக. 252) பரமானந்த வடிவினளாக இருந்து பக்குவ ஆன்மாக்களுக்குப் பேரின்பத்தை அருள்பவள்.

(viii) ஓம் ப்ரஹ்மானந்தாயை நம : (லலி. சக 676) பரப்பிரமத்தின் ஞான வடிவானவள்;

(ix) ஓம் சித்கனானந்தாயை நம : (சிவகாமி அஷ். 45)

(x) ஓம் சச்சிதானந்த ரூபிண்யை நம : (லலி. சக 700) உண்மை, அறிவு, ஆனந்தம் ஆகியவற்றை வடிவாகக் கொண்டவள்.

(xi) ஓம் சச்சிதானந்த விக்ரகாயை நம : (சிவகாமி அஷ், 13)

(xii) ஓம் ஆனந்த - கலிகாயை நம : லலி. சக. 629) உயிர்களிடம் ஆனந்தத்தின் கூறுக (அம்சமாக) இருப்பவள்.

(xiii) ஓங் சுகப்ரதாயை நம : (லலி. சக. 9.) சுகத்தை-பேரின்பத்தைத் தருபவள்.

(xiv) ஓம் முக்தி ரூபிண்யை நம : (லலி. சக. 737) பரமானந்த மோட்சமாக இருப்பவள்,

இவை போன்ற மந்திரங்கள் பலவற்றை உணர்த்தி நிற்பன ''அடியார்கட் காரமுதம் ஆன அடி'' (பா. 28) ''சிறந்தவர்க்குத் தேனாய் விளைக்கும் அடி'' (பா. 29) அடியார்கட்காரமுதம் ஆனாய் போற்றி (பா 9) ஆலைக்கரும்பின் தெளிவே போற்றி (பா. 9) அடியார்கட் கமுதெலாம் ஈவாய் போற்றி (பா. 18) என்ற தமிழ் மறைகள்.

## (அ) திருவடி — மருந்து

மருந்தாய்ப் பிணி தீர்க்க வல்லஅடி :

பிறவி நோயை, (பிறவிக்குத் காரணமாக ஆணவ மலமாகிய நோயைப்) போக்குபவள்; பாச நீக்கம் செய்பவள் திருராதான; சத்தி; இச்தத்தியே பெத்த ஆன்மாக்கள் பற்றி நிற்கும் திருவடி.

(i) ஓம் சர்வ - வ்யாதி - ப்ரசமன்யை நம: (லலி. சக 551 எல்லா நோய்களையும் போக்குபவள்.

(ii) ஓம் பவரோகக்ன்யை நம; (லலி. சக, 842) பிறவிப் பிணியைப் போக்குபவ்ள்.

(iii) ஓம் பவநாசின்யை நம: (லலி. சக 175) பிறவி நோயைப் போக்குபவள்.

(iv) ஓம் மிருத்யு - மதன்யை நம: (லலி சக. 181) மரண பயத்தைப் போக்குபவள்.

(v) ஓம் சர்வ - மித்ரு - நிவாரண்யை நம: (லலி. சக. 552) எல்லா விதமான மரணங்களையும் தவிர்ப்பவள்.

(vi) ஓம் பாச - ஹந்த்ர்யை நம: (லலி சக. 811) பாசங்களைப் போக்குபவள்

(vii) ஓம் பசுபாச - விமோசின்யை நம: (லலி. சக. 354) உயிர் களது மும்மலங்களையும் போக்குபவன்.

(viii) ஓம் பந்த - மோசன்யை நம: (லலி. சக 546) மலபந்தங் களிலிருந்து விடுவிப்பவள்.

(ix) ஓம் பாபநாசின்யை நம: (லலி சக. 167) தீவினைகளை நசிப்பவள்; கன்மமல நீக்கம் செய்பவள்.

(x) ஓம் மோஹ - நாசின்யை நம: (லலி. சக. 163) ஆணவ மலத்தால் உயிர்களுக்கு உண்டாகும் மயக்கத்தைப் போக்கு பவள்.

(xi) ஓம் நித்ய - முக்த்தாயை நம: (லலி. சக. 144) என்றும் பந்தம் இல்லாதவளாய் உயிர்களது பந்தத்தைப் (பாசத்தைப்) போக்குபவள்.

(xii) ஓம் நித்ய - சுத்தாயை நம: (லலி. சக. 148) என்றும் மல அழுக்கினின்று நீங்கினவள்; உயிர்களது ஆணவ மல அழுக்கை ஒழிப்பவள்.

(xiii) ஓம் நிர்மலாயை நம: (லலி. சக. 135) மல சம்பந்தம் அற்ற வளாய் உயிர்களது ஆணவ மலப் பிணியைப் போக்குபவள்.

'மருந்தாய்ப் பிணி தீர்க்க வல்ல அடி'' என்ற தமிழ் மறை இவ்வடமொழி மந்திரங்கள் போன்ற பலவற்றைத் தன்னுள் அடக்கி நிற்றல் புலப்படும்.

பா. 30. நினைவார் - தன்னை இதய கமலத்தில் வைத்து தியானிப் பார்; சிவயோக நெறியில் நிற்பவர். அவர்க்கு இனியனுதல் - அவர்களைப் பேரின்பத்தில் அழுத்துதல்; சிவானந்தானுபூதி அருளுதல்.

உமையோடிருந்தானே - சிவபெருமான் உமையோடிருந்தல் பக்குவம் பெற்ற உயிர்களைப் பேரானந்தத்தில் அழுத்துதற் பொருட்டு.

பா. 31. செல்வம் மல்கு திருமங்கலக்குடி - உலகியற் செல்வமும். திருவருட்செல்வம் ஆகிய இரண்டும் நிறைந்த திருமங்கலக் குடி ஆகிய தலம். சிவநியமத்தர்-சிவாகம நெறிகளில் நிற்போர் அவர்கள் கொண்ட செல்வம் - திருவருளாகிய செல்வம் மறையோர் பெறும் செல்வம் - உலகியற் செல்வம்; பத முத்தி கள். தேவியோடும் திகழ் செல்வன் - இறைவன் உமையம்மை யுடனுய் மணக்கோலம் கொண்டு நிற்றல் உயிர்களுக்கு உலக இன்பச் செல்வங்களையும் பேரின்பச் செல்வத்தையும் அருளுதற் பொருட்டாம்

பா. 32. புவனம் ஆனுய் போற்றி - ஓம் சத்யோஜாதாய நம: (புவனம் - மண் மண்டலம்)

நீர் ஆனுய் போற்றி - ஓம் வாம தேவாய நம:
தீ ஆனுய் போற்றி - ஓம் அகோராய நம:
கால் ஆனுல் போற்றி - ஓம் தத்புருஷாய நம:
வான் ஆனுய் போற்றி - ஓம் ஈசானுய நம:

பா. 33 மணப் பெண்ணின் பெற்றேர் மணமகனுக்குத் தம் பெண்ணைத் தாரை வார்த்துக் கொடுக்கும் போது 'அருந்ததி போன்று கற்பில் என்றும் வழுவாதவள் இவள்; இவளை உமக்கு

அளித்தேன்' என்று கூறிக் கொடுப்பது, பெற்றோர் வாக்களித்தவாறே பெண்ணும் எந்நிலையிலும் கற்பு வழுவாது நிற்றல் வேண்டும் என்ற குறிப்பினைக் கொண்டது.

## 16. உமா மகேச்வர மந்திரம்

பா. 34. கூறேறு உமை ஒருபால் கொண்டாய் போற்றி - ஓம் உமா மகேச்வராய நம: மழு - பார சத்தி வடிவு; அரவம் ஆட்டுதல் — குண்டலி ஆகிய பாம்பை (மாயையை)த் தொழிற்படுத்தி உலகுகளைப் படைத்தலும், ஒடுக்குதலுமாம். இவற்றைச் செய்வது கிரியாசத்தி;

பா. 35. உமை ஆகத் தணைத்தாய் போற்றி — ஓம் உமா மகேச்வராய நம: இது உமை ஆகத்து (உடலோடு) அணைத்த (ஒரு பாகமாகக் கொண்ட) உமையொருபாக வடிவை போற்றுவது

பா. 36. (அ) துடியார் உமையாள் பங்கா போற்றி — ஓம் உமா கேச்வராய நம: இதுவும் உமையொரு பாகனைப் போற்றியது.

இம்மூன்று பாடல்களாலும் உமாமகேச்வர மந்திரத்தை மும்முறை ஓதி திருமங்கல நாண் பூட்டப் பெறுதல் காண்க.

(ஆ) முழுநீறு சண்ணித்த மூர்த்தீ போற்றி — ஓம் கவசாய நம: மணமகன் திருமங்கல நாணை மணமகள் கழுத்தில் முடியும் போது இக்காப்பு மந்திரத்தை ஓதுதல் வேண்டும்.

பா. 37. (i) எம்பிரான், வானவர் ஏறு, செம்பிரான், உம்பரான் - இந்நான்கும் சிவபெருமானை உணர்த்துவன; 'சி' (ii) மங்கை வெண்ணீறு, சிற்றம்பலம், ஆள்பவள் சத்தி. 'வ'

(iii) எம், வானத்தவர், ஏறு (இடபம், சுத்தான்மா), என்னை - இந்நான்கும் ய'; போற்றி - நம:

எனவே சிவமூல மந்திரம் இத்திருவாசகத்தால் நான்கு முறை ஓதப் பெறுவது புலனுகும். சிவமூலமந்திரம் ஓதி மணமகன் திருமங்கல நாண் முடியின் மேல் திருநீறு சாத்துதல் வேண்டும்

## 17. வேள்வித் தீ இறைவன் தூல வடிவு

பா. 38. எரி - வேள்வித்தீ. ஈசனது உருவருக்கம் - இறைவனது எட்டுத் தூல வடிவங்களில் எரியும் ஒன்று. உலக மக்கள் வேள்வித் தீயில் அக்னி தேவனை வழிபடுவர். அக்னி தேவன்

வேள்வித் தீயில் நாம் இடும் அவிசுகளைச் சிவபெருமானிடம் சேர்ப்பவனன்றி, அவ்வேள்வியின் பலனைத் தருபவன் அல்லன். ஆதலின் வேள்வித் தீயில் அக்னி தேவனை வழிபடல்; மனக் கோட்டை கட்டிய நரியின் செயல் போன்று பயனற்றதாகும். 'சிவபெருமானே யாகங்களுக்குரிய பதி' என இருக்கு வேதம் சாற்றும்; 'அக்னியிற் செய்யப்படும் சோமாகுதியும் சிவபெருமானுக்கே உரியது' என யசுர்வேதம் கூறும். 'எல்லாக் கிரியைகளும் சிவனது ஆணையாற் செய்யப்படுகின்றன' என்னும் சாமவேதம்.

பா. 39. வேள்வித் தீயில் நாம் இறைவனை வணங்குவது. அவன் அத்தீயில் ஒன்றாய்க் கலந்து (புணர்ந்து) நிற்பதால். நெருப்பு இறைவனது அட்ட மூர்த்தங்களில் (வடிவங்களில்) ஒன்று. அட்ட மூர்த்தங்கள், அவற்றின் அதிதெய்வங்கள், அதிதெய்வங்களுக்குரிய மந்திரங்கள் ஆகியவற்றைக் கீழ் உள்ள அட்டவணையிற் காண்க.

| மூர்த்தம் | அதிதெய்வம் | மூர்த்தமந்திரம் |
|---|---|---|
| 1. மண் (நிலம்) | சர்வர் | ஓம் சர்வாய தேவாய நம: |
| 2. நீர் | பவர் | ஓம் பவாய தேவாய நம: |
| 3. நெருப்பு | உருத்திரர் | ஓம் ருத்ராய தேவாய நம: |
| 4. காற்று (உயிர்) | உக்கிரர் | ஓம் உக்ராய தேவாய நம: |
| 5. ஆகாயம் (விசும்பு) | பீமர் | ஓம் பீமாய தேவாய நம: |
| 6. சூரியன் (பகலோன்) | ஈசானர் | ஓம் ஈசான தேவாய நம: |
| 7. சந்திரன் (நிலா) | மகாதேவர் | ஓம் மஹதே தேவாய நம: |
| 8. ஆன்மா (மைந்தன்) | பசுபதி | ஓம் பசுபதயேதேவாயநம: |

வேள்வியில் இந்த அட்ட மூர்த்த மந்திரங்களை ஓதி, அட்ட மூர்த்தங்களும் வேள்வித் தீயில் பாவிக்கப்பட்டு வணங்கப் பெறுவன. இத்திருவாசகம் வேள்வித் தீ அர்ச்சனைக்கு உரித்தாதல் இதனால் அறியப்படும்.

## 19. ஆசனம், மூர்த்தி, மூர்த்திமான்

பா. 40. சுடர்மணி விளக்கு — ஓம குண்டம்; சிவ வேள்வியில் ஓம குண்டம் பிரணவமாகப் பாவிக்கப் பெறும் பிரணவ ஓம குண்டம் சோதி வடிவான இறைவனது ஆசனம். அவ்விளக்கிற் கதிர் விடும் ஒளி (தூய நற்சோதி) சிவாக்கினி. சிவாக்கினி

இறைவனது வடிவு, மூர்த்தி. இத்தூய சோதியுள் விளங்கும் சோதிப்பொருள் - சிவபெருமான்; மூர்த்திமான், இருட் பிழம்பு எறிதல் - உயிர்களது ஆணவ மல பந்தத்தை நீகுதல், இத்திருத்தாண்டகத்து இரண்டாவது அடியில், வேள்வித் தீ வடிவு கொண்ட சிவபெருமானது ஆசனம். மூர்த்தி, அவன் மூர்த்திமானாக நிற்றல் ஆகிய மூன்றும் போற்றப்படுவது காண்க.

பட்ர்ஒளி பரப்புதல் - பக்குவ உயிர்களுக்கு வியாபக அறிவை அருளிச் செய்தல்; வியாபக அறிவை மறைக்கும் ஆணவத்தை நீக்குதல், மாபெரும் தீப் பிழம்பாய் நின்ற இறைவனை அயன், மால் காணாதது அவர்களது ஆணவ மல பந்தத்தால்.

பா. 41. முக்கணன் - இச்சா ஞானக்கிரியா சத்திகளை மூன்றுகண்களாகக் கொண்ட சிவபெருமான். முழுச்சுடர் - உயிர்களுக்கு வியாபக அறிவை அளிப்பவன். அகிலமும் உண்ணுதல் - சர்வ சங்கார காலத்தில் எல்லா உலகுகளையும் மாயையில் ஒடுக்குதல் திசை எங்கும் காணுதல் - மீண்டும் படைக்கும் (புணர் உற்பவ) காலத்தில் எல்லா உலகுகளையும் படைத்தல். எக்கணன்தானுக்கும் - எந்த அறிவுடைய உயிருக்கும், தலைவன் - (அறிவினை நல்கும்) இறைவன்

பா. 42. நெடுவானில் நிற்றல் - விண்ணில் சூரியனாய்த் தீப்பிழம்பாய் நிற்றல்; நெருப்பு - வேள்வித் தீ, ஆறு - ஆறு அத்துவாக்கள் (வழிகள்). தத்துவம், புவனம், கலை, எழுத்து, பதம், மந்திரம் ஆகிய ஆறும் உலக போகங்களுக்கும் மோட்சங்களுக்கும் வழியாக அமைந்திருப்பதால் இவை அத்துவா எனப்படும். பூணுதல் - இறைவன் இந்த ஆறு அத்துவாக்களையும் தனது தூலத் திருமேனியாகக் கொண்டிருத்தல்.

பா. 43. அங்கி - வேள்வித் தீ; நல் வேள்வி - ஆகம விதிப்படி நன்றாகச் செய்யப்பட்ட (நல்ல பயனைத் தரும்) வேள்வி; வேள்வி எல்லாம் - வேள்வியால் வரும் எல்லா நற்பயன்களையும். பாதம் நண்ணிடச் செய்தல் - வேள்வியின் பயன்களை இறைவனுக்கே அர்ப்பணம் செய்தல். வேள்வியின் இறுதியில் வேள்விப்பயன்களை இறைவனுக்கே ஈதல் வேண்டும் என்பது விதி.

# 20. காயத்திரி மந்திரம்

பா. 44. மணமகன் மணப்பெண்ணின் கையைத் தனது வலது கையாற் பிடித்துக் கொண்டு, ஏழு அடி எடுத்து வைத்து, மணப்பெண்ணின் வலது பாதத்தைத் தனது இருகைகளாலும் எடுத்து அம்மி மீது இடும் போது ஓதப்பெறும் மந்திரம் சிவகாயத்திரி. இதனை அகோர சிவாசாரியர் தமது சைவ ஷோடகப் பிரகாசிகையில் எடுத்துக் காட்டுவர். இம்மந்திரம்,

ஓம் தந்மஹேசாய வித்மஹே
வாக் விசுத்தாய தீமஹி
தந்நோ சிவ: ப்ரசோதயாத்

என்பது. இம்மந்திரம் "எங்களைச் செலுத்துகின்ற மகேச்சுரனை நாங்கள் தியானிக்கின்றோம் அல்லது நாம் தியானிப்போமாக" என்ற பொருள் கொண்டது. எல்லா உயிர்களிலும் உயிர்க்குயிராய் (உடனாய்) நின்று, அவ்வுயிர்களை மறைந்து, உலக போகங்களிற் செலுத்துகின்றவர் பஞ்சகாரணேசுவரர்களில் ஒருவராகிய மகேசுவரர். இம்மூர்த்தியின் சத்தி (ஆற்றல்) ஆகிய உமையம்மையே இக்காயத்திரி மந்திரத்தால் வணங்கப் படுபவர்.

இத்திருத்தாண்டகத்தில் போற்றி என முடியும் முதல் ஏழு சொற்றொடர்கள் ஒவ்வொன்றும் பஞ்சப் பிரமமந்திரங்களில் ஒன்றான தற்புருஷ மந்திரமாம்.

(1) சில் உருவு - சிறு தெய்வ வடிவங்கள்; மகேச்வரரது அதிகாரத்தைப் பெற்ற அயன், மால் உருத்திரன், சீகண்ட உருத்திரர், அனந்தர் முதலியோரது வடிவுகள். இவ்வடிவங்களில் நிற்கும் பக்குவம் பெற்ற உயிர்களில் (தேவர்களில்) கலந்து உடனாய் நின்று, அவர்களைத் தொழிற்படுத்துபவர் தத்புருஷதேவர். (தத் - அந்த; புருஷம் - புரத்தில் அல்லது சரீரத்தில் இருப்பவர்)

(2) தேவர் அறியாத தேவர் - சிறு தெய்வங்களோடு உடனாய் நின்ற போதும் அத்தெய்வங்கள் தன்னை அறியாதவாறு, மறைந்து நின்று, அவர்களைத் தொழிற்படுத்தும் மகேச்சுவரர் (ஈச் - ஆளுதல்). தத்புருஷ மந்திரத்தால் வணங்கப்படுவர் மகேச்சுவரர்.

(3) புல் உயிர்க்கும் பூட்சி புணர்த்தல் உயிர்களை மறைத்து உலக போகங்களிற் செலுத்துதல். (பூட்சி – உடல்; இன்ப துன்பங் களை நுகருந்தற்கு வேண்டிய உடல், உட்கருவி, புறக்கருவிகள்)

(4) சிந்தை புகுதல் - உயிர்க்குயிராய் உயிர்களுடன் கலந்து ஒன்றாய் நிற்றல் (சிந்தை; உள்ளம் உயிர். உள்ளம் என்றசொல் உயிர் என்ற பொருளில் வருவதைச் சைவ நூல்களிற் காணலாம்.)

(5) பார்தோறும் உயிராய் நிற்றல் - அசுத்த மாயா தத்துவங் களிலும் ஒன்றாய்க் கலந்து நின்று அவற்றை அனந்ததேவர், உருத்திரர், மால் அயன் ஆகியோர் வாயிலாக காரியப்படுத்தி நிற்றல். (பார் – மண் தத்துவம்).

(6) உலகைப் பற்றி விடாதிருத்தல் - உயிர்கள் பக்குவம் எய்தும் வரை அவற்றை மறைத்து உலக போகங்களிற் செலுத்துதல்.

(7) கல்லுயிராய் நின்ற கனல் - அறிவற்றுச் செயலற்று நிற்கும் கல் போன்ற சடப் பொருள்களிலும் மறைந்து நிற்கும் இறைவனது (வெப்ப) ஆற்றல். கல்லில் உள்ள அணுக்கள் (atoms) மிக்க ஆற்றல் (energy) கொண்டன. இவ்வாற்றலுக்குக் காரணமாக இருப்பவர், தீ (கனல்) மண்டல தெய்வமாகிய உருத்திரர். அவ்வுருத்திரத்திரருள் நின்று அவரைச் செலுத்துபவர் மகேச்சுவரர்.

எனவே, இவ்வேழு போற்றிகளும் மகேச்வரர்க்குரிய 'ஓம் தத்புருஷாய நம:' என்ற பிரம மந்திரம் ஆதல் அறியப்படும்.

மேலும் இங்கு கல் என்ற சொல் உடல், புற உறுப்புகள், அக உறுப்புகள் ஆகியவை ஒன்றுமின்றி ஆணவத்தில் அழுந்தி நிற்கும் (கேவல நிலையில் இருக்கும்) உயிரை உணர்த்தி நிற்பது. மணமகன் மணமகளது பாதத்தை அம்மிக்கல் மீது எடுத்து வைக்கும் போது அப்பெண்ணை மகேச்வர மூர்த்தி யாகவும் அவள் பாதத்தை அம்மூர்த்தியின் திருவருளாகவும் பாவித்து இச்சடங்கினைச் செய்தல் வேண்டும்; தன்னை அம்மிக் கல்லாக நினைந்து 'மகேச்சுர மூர்த்தியின் திருவருள் உமை யம்மை) தன்னோடு பொருந்தி நின்று தன்னைச் செலுத்துவ தாக' என நினைந்து அம்மியின் மீது மணப்பெண்ணின் பாதத்தை மணமகள் வைத்திடல் இதன் உண்மைப் பொருளா தல் வேண்டும்.

எனவே, மணமகன் மணப்பெண்ணின் பாதத்தை அம்மி யின் மேல் இடுவதின் உண்மைத் தத்துவம் 'மிகச் சிறிய அறிவும் ஆற்றலும் உடைய தன்னுடன் உமையம்மையின் ஆற்றல் என்றும் பிரியாது தன்னுடனய் நின்று தன்னை நன்னெறியிற் செலுத்துவதாகுக' என உமையம்மையை வேண்டுதலேபோலும். இக்கருத்தினைக் கொண்டே 'எங்களைச் செலுத்தும் உமையம்மையை நாம் தியானிப்போமாக' எனப் பொருள் கொண்ட சிவகாயத்திரி மந்திரம் இச்சடங்கில் ஓதப் பெறுகிறது போலும்

இறைவனது பேராற்றலின் ஒரு சிறிய கூறே அம்மையின் திருப்பாதம். அவனது அளவற்ற பேருளில் ஒரு மிகச் சிறிய அளவை நம் பக்குவத்திற்கு ஏற்ப நாம் பெறுகிறோம் இம்மிகச் சிறிய கூறு நம்மை மேல் மேலும் நன்னெறிகளிற் செலுத்தி நமது அறிவையும் ஆற்றலையும் பெருகச் செய்யும்; இறுதியில் திருவருட் சத்தியாக நின்று பேரறிவையும் (பரஞானம்) பேரின்பத்தையும் பெறச் செய்யும் இவ்வாறு உமையம்மையின் ஆற்றலின் ஒரு மிகச் சிறிய கூறு நம்பால் பதிந்து நின்று தம்மை அருள் நெறியிற் செலுத்த வேண்டும் என்ற குறிக்கோளைத் தன்னுட் கொண்டது மணமகன் மணமகளின் பாதத்தை அம்மியின் மேல் இடுதலாகிய இச்சடங்கு என நாம் கொள்ளலாம்.

மகேச்வரனும் அவனது ஆற்றலாகிய உமையம்மையும் வேறல்லர். சூரியனும் அவனது ஒளியும் வெப்பமும் கொண்ட கதிர்களும் போன்று, ஒருவரை விட்டு ஒருவரை பிரித்தறியாத வாறு ஒன்றி நிற்பவர்கள்; ஆதலின் முதல் ஏழு போற்றிகளும் (மந்திரங்களும்) மகேச்சுர மூர்த்திக்கன்றி உமையம்மைக்கும் பொருந்துவதாக நின்று காயத்திரி மந்திரமுமாதல் காணப் படும்.

எனவே இத்திருத்தாண்டகத்தை மணமகன் ஓதுவதால் காயத்திரி மந்திரம் எண் முறை செபிக்கப்படுதல் புலனாம்.

திருச்சிற்றம்பலம்.

## அச்சுப் பிழைத் திருத்தங்கள்

| பக்கம் | பகுதி | பாடல் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| iv | 2 | — | 4 | மாந்தர் தம் | மாந்தர் |
| 2 | 2 | — | 10 | மாந்தர் தம் | மாந்தர் |
| 2 | 1. 4 | 5 | 4 | சுடர்க் விளக்காய் | சுடர் விளக்காய் |
| 2 | 2. 1 | — | — | உட்கா | உட்கார |
| 2 | 2. 1 | 6 | — | திரு அகல் | திரு அகவல் |
| 3 | 2 2 | 7 | 1 | உள்ளது நீர | உள்ளது நீறு |
| 3 | 2. 4 | — | 3 | பயிறு | பயறு |
| 3 | 2. 4 | 9 | 6 | போாற்றி | போற்றி |
| 4 | ஆ | 10 | 7 | பே ற்றி | போற்றி |
| 5 | 2. 6 | 14 | 4 | காற்றய | காற்றிய |
| 5 | 5. 1 | 15 | 6 | உடைய ய் | உடையாய் |
| 6 | 3. 4 அ | 19 | 7 | போற்டு | போற்றி |
| 7 | 3. 5 அ | 20 | 6 | மேவர்க்கும் | மேலவர்க்கும் |
| 7 | 3. 5 ஆ | 22 | 5 | பன்ருர் | பன்னூர் |
| 8 | 4. 1 | 24 | 8 | வீட்டம் | வீரட்டம் |
| 9 | 5 | 26 | 4 | தூறிக் | ஊறிக் |
| 10 | ஆ | 29 | 8 | செலவன் | செல்வன் |
| 10 | 8 | 30 | 2 | வினட | விடை |
| 10 | 8 | 30 | 3 | புதியாக | பதியாக |
| 12 | ஆ | 36 | 2 | மூர்த்தி | மூர்த்தீ |
| 12 | 12 | 38 | 2 | தாவது(து) | தாவ(து) |
| 13 | — | 40 | 1 | ஆண் கொண்(டு) | ஆண்டு கொண்(டு) |
| 13 | — | 43 | 3 | இடையநு | இடையரு |
| 14 | — | 44 | 4 | போதென் | போகாதென் |
| 16 | 13. V | — | — | விஷட் | வஷட் |
| 23 | 6 | 8 | 1 | கிவாய | சிவாய |
| 24A | 10 | 12 | 3 | வராறு | வராது |
| 26 | — | 21 | 5 | பொட்டன்று | பொருட்டன்று |
| 29 | 13 | 25 அ | 5 | கிரணமான | கரணமான |
| 30 | — | 25 இ | 2 | பௌஷ்கட | பௌஷ்கர |
| | | | | பீடிகை | தீபிகை |
| 30 | — | iv இ | — | பீடிகை | தீபிகை |
| 30 | — | v | 2 | அனவிலா | அளவிலா |
| 42 | — | — | 4 | தன்னுடனய் | தன்னுடனுய் |

மேலே குறிப்பிட்ட அச்சுப் பிழைகளைத் திருத்திக் கொண்டு படிக்க அன்பர்களை வேண்டுகிறோம்.